# கல்கி

KALKI 21.3.93
ரூ. 3.00



முதல்வராகிறார்
பவார்;
ஆனாலும்...

# பிரதமர் பதவி மீதே குறி வைக்கிறார்கள்!




நேர்த்தியான பழங்களிலிருந்து
மட்டுமே ஸ்க்வாஷ் தயாரிக்க முடியும்.

பழங்களைக் கொண்டு தயாரிக்கப்படுகிறது.

**VOLFRUIT GOLD**
ORANGE SQUASH

பாட்டிலில் இயற்கையான ஸ்க்வாஷ்



# ஏழையாய்ப் பிறந்ததால் எழுதுகிறார்!

பூனாவிலுள்ள ஆவணக் காப்பகத்தில் பியூனாக இருக்கும் உத்தம் பந்து தூபி, இதுவரை 31 நூல்கள் எழுதியுள்ளார். இவற்றில் பதினான்கு இலக்கியப் பரிசுகள் பெற்றுள்ளன!

''இலக்கியத்திற்குப் பணக்காரன், ஏழை என்கிற வித்தியாசமோ சாதி, மத வேறுபாடுகளோ இல்லை'' என்கிறார் உத்தம் பந்து தூபி.

கிராமப் பள்ளிக்கூடத்தில் வெறும் மூன்றாம் வகுப்பு மட்டுமே படித்த தூபி, முத்தா நதிக்கரையில் உள்ள மிகவும் சுகாதாரம் இல்லாத சேரியில் பிறந்தவர். தூபியின் எழுத்துப் பணி 72-ல் துவங்கியது. சமூக பிரச்னைகள் சமுதாய முரண்பாடுகள் ஆகியவையே இவரது எழுத்துக்களின் களன்.

''ஒருபுறம் பியூன்; மறுபுறம் இலக்கியவாதி என்று எப்படி இருக்க முடிகிறது?'' என்ற வினாவுக்கு ''நான் படிக்காதவன்; நான் ஆசிரியராக இருக்க முடியாது. ஆகவே பியூன் வேலைதான் சரியானது'' என்கிறார். அதோடு, தமது வேலை குறித்து தூபி வருத்தமோ, வெட்கமோ அடைவதில்லை. ஆயினும் அலுவலகத்தில் பணியாற்றுபவர்கள் தம்மை அவமரியாதையாய் நடத்தும் போது புண்பட்டுப் போகிறார்.



''என்னை எழுத்தாளர் என்ற நிலையில் வெளிநாட்டினரெல்லாம் மதிக்கிறார்கள் என்றாலும் அந்த நிலையை நான் அடைந்து விட்டதற்காகச் சில இந்தியர்கள் என் மேல் காழ்ப்புணர்ச்சி கொள்கிறார்கள்'' என்கிறார்.

சௌண்டம் பகுதியில் உள்ள தேவதாசிகளைப் பற்றிய தூபியின் நாவல் ''ஜோல்வா''. அதை எழுதுவதற்காகத் தூபி பெண் வேடமிட்டு தேவதாசிகள் மத்தியில் பழகி அவர்களின் வாழ்வின் வேதனைகளைக் கண்டறிந்தார். தமது நாவலிலும் வெளிப்படுத்தினார். இந்த நாவல் ஜெர்மானிய மொழியில் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

மராட்டிய கர்னாடக எல்லைப் பகுதியில் வாழும் பஸ்மா மலைவாழ் மக்களின் வறுமை மிகுந்த வாழ்வினை வெளிப்படுத்துவது ''பஸ்மா'' என்ற நாவல்.

இவரது நாவல்கள், தாழ்த்தப்பட்டவர்களைப் பற்றிய (தலித்) இலக்கியம் என்று கருதப்படுகின்றன.

தூபியின் மனைவி ஜீஜாபாய் ஒரு கவி. மராத்திய தீபாவளி இதழ்களில் ஜீஜாபாயின் கவிதைகள் வெளிவரும். இத்தனைக்கும் பள்ளியின் நிழல் கூட அவர் மீது பட்டதில்லை!

''இதைவிட நல்ல சூழ்நிலையில் பிறக்கவில்லையே என்று நீங்கள் எண்ணியதுண்டா?'' என்ற கேள்விக்கு, ''இல்லை; நான் வருந்தியது இல்லை. நான் ஏழை. அதனாலேயே எழுதுகிறேன். சேரி வாழ்க்கையும், எனது வறுமையும்தான் என்னை எழுதத் தூண்டின. எனது வாழ்வே எனக்குப் பாடமாயிற்று. வளமான சூழ்நிலையில் நான் பிறந்திருந்தால் எழுத்துப் பணிக்கு வந்திருக்க மாட்டேன்'' என்று சொல்லும் தூபி, ''நான் இன்னும் நன்றாக எழுதுவேன்; நோபல் பரிசு பெறுகிற அளவுக்கு எழுதுவேன்!'' என்கிறார்.

தூபி எழுத்தாளர் மட்டுமல்ல; இப்போது கோவிந்த் நிகலானியின் 'சாகர் கி மோதி' படத்திலும், ஒரு மராட்டிய மொழிப் படத்திலும் நடித்தும் உள்ளார். மராட்டிய மொழியில் தொலைக்காட்சித் தொடர் ஒன்றினையும் தயாரித்துக் கொண்டிருக்கிறார்.

தகவல் : ''கங்கைகொண்ட சிவன்''

# பிரதமர் பதவி மீதே குறி வைக்கிறார்கள்!

பிரதமர் நரசிம்மராவின் பதவிக்குக் குறிவைத்திருப்பவர்கள் என்று பலராலும் கருதப்படுகிறவர் இருவர். ஒருவர் சரத் பவார்; இன்னொருவர் அர்ஜுன் சிங்.

மகாராஷ்டிர முதல்வராகச் சரத் பவாரைச் சாமர்த்தியமாகக் கழற்றி விட்டு விட்டதில் நரசிம்மராவுக்கு ஒரு தாற்காலிக நிம்மதி கிடைத்திருக்கிறது என்றாலும் 'மகாராஷ்டிர அரசியல் நிலைமை சீரடைந்ததும் மீண்டும் தில்லிக்கு வருவேன்' என்று சரத் பவார் கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

பம்பாய்க் கலவரங்களை அடக்க முடியாத மகாராஷ்டிர முதல்வர் சுதாகர்ராவ் நாயக்கைப் பதவியை விட்டு இறக்காமல் நரசிம்மராவ் தாமதித்ததை யாரும் மறந்திருக்க மாட்டார்கள். உள்துறை அமைச்சர் சவாண் நாயக்கின் ஆதரவாளர். எனவே, இது சவாணுக்கும் பவாருக்கும் நடக்கும் நிழல் யுத்தம் என்றும் கூறப்பட்டது. இரு மத்திய அமைச்சர்களின் சுயநலனில், இந்தியாவின் பொருளாதார மையமான பம்பாய் நகரம் சிக்குண்டு சிதைய வேண்டுமா என உள்ளுக்குள் குமுறியவர்கள் ஏராளம்.

சரத்பவார் தம்மைக் கவிழ்க்கத் திட்டமிடுவதாகக் கருதிய நாயக், பவாரைக் கட்சியிலிருந்தே விலக்க வேண்டும் என்று ஆத்திரத்துடன் கூறி ஒரு வாரம் கூட ஆகவில்லை. நாயக்கே பதவி விலகும்படியாயிற்று! இவ்வளவுக்கும் பவார் பதற்றமடையவில்லை. துளியும் அலட்டிக் கொள்ளவில்லை. அவரை நன்கு அறிந்தவர்கள் "அதுதான் அவர் சுபாவம்!" என்கிறார்கள்.

பார்க்கப் போனால் சுதாகர்ராவ் நாயக்கை முதல்வராகப் பதவியில் அமர்த்தியவரே பவார்தான். அப்படி இருக்க, நாயக் ஏன் பவாருடன் முறைத்துக் கொள்ள வேண்டும்? நாயக் சொன்னார் : "நான் யாருடைய கைப்பாவையாகவும் செயல்பட விரும்பவில்லை. எனக்கென்று ஓர் இமேஜ் வேண்டும். அதை என்னால் உருவாக்கவும் முடியும்!" அவர் உருவாக்கிக் கொண்ட இமேஜ் அவரைக் காப்பாற்றவில்லை.

## மார்பில் ஊர்ந்த பாம்பு!

முப்பத்தெட்டு வயதிலேயே முதலமைச்சரான சரத் பவார் லேசுப்பட்டவரல்லர். 78-ல் அவர் முதலமைச்சரான போது, வலதுசாரி ஜனசங்கம் முதல் இடதுசாரி மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வரை ஓர் ஒன்பது கட்சிக் கூட்டணி அரசை மிகத் திறமையாக நடத்திக் காட்டியவர். அவர் முதல்வராக ஆவதற்கு முன்னால் ஒரு நிகழ்ச்சி நடந்தது.

பூனாவை அடுத்த பீமா சங்கரில், ஒரு கோயிலுக்குச் சொந்தமான ரெஸ்ட் ஹவுஸில் பவார் தூங்கிக் கொண்டிருந்த போது, ஒரு பெரிய நாகப் பாம்பு அவரைத் துளிக் கூட விழிப்படையச் செய்யாமல், அவர் மார்பு மீது ஊர்ந்து சென்று கடந்தது. அவரை எழுப்ப வந்த பூசாரி ஜன்னல் வழியே இதைப் பார்த்துப் பயந்து போய்த் திகைப்பில் நின்று விட்டார். "நீங்கள் ஒரு நாள் மிகப் பெரிய பதவி வகிக்கப் போகிறீர்கள் ஐயா!" என்றார் பூசாரி. வசந்த் தாதா பாடீல் அமைச்சரவை கவிழ்ந்து, பவார் முதல்வர் பதவி ஏற்றார்!

சென்ற நாடாளுமன்றத் தேர்தலில் மகாராஷ்டிரத்திலிருந்து அதிக இடங்களைக் காங்கிரசுக்குப் பெற்றுத் தந்த அசாத்திய சாமர்த்தியமும் பவாருக்கு இருந்ததை காங்கிரஸ் மேலிடம் நன்கு உணர்ந்தே இருந்தது. மகாராஷ்டிர முதலமைச்சராயிருந்தவரை, மெனக்கெட்டு மத்திய அரசுக்கு இழுத்தார்கள் - பாதுகாப்பு அமைச்சராகப் பதவி கொடுக்க. 'பாதுகாப்பு அமைச்சர் பதவி மட்டுமே பவாரைத் திருப்திப்படுத்தாது; அவர் குறி பிரதமரின் நாற்காலிதான்' என்று சொல்லாதவரே இல்லை. ஆனால் நரசிம்மராவுக்கு நாடாளுமன்ற காங்கிரஸ் கட்சிக் கூட்டம் கூடிய போது தெரிவிக்கப்பட்ட அமோக ஆதரவைக் கண்டதும், தாம் இந்தப் போட்டியிலேயே இல்லை என்று அறிவித்ததோடு, நரசிம்மராவுக்கு அன்று

முதல் முழு ஆதரவு காண்பிக்கத் தொடங்கினார் பவார்.

ஆனால் நரசிம்மராவுக்கு பவாரிடமிருந்து அச்சுறுத்தல் வரும் என்று உள்ளூர ஒரு பயம் இருந்து வந்ததும் உண்மை. இப்போது அந்தக் கவலை தாற்காலிகமாகவாவது இல்லை எனலாம். ராவ், பவாரைக் கூப்பிட்டு 'நீங்கள்தாம் மகாராஷ்டிர முதல்வராகப் பதவி ஏற்க வேண்டும். உங்களால் தான் இந்தச் சமயத்தில் நிலைமையைச் சமாளிக்க முடியும்' என்று சொன்ன போது, முதலில் தயங்கிய பவார் பிறகு வேறு வழியின்றி ஒப்புக் கொள்ள வேண்டியதாயிற்று.

பவாரின் ஆதரவாளர்களுக்கு இந்தச் செய்தி அசாத்திய ஏமாற்றத்தை உண்டாக்கியது. பவாரின் நம்பிக்கைக்குரிய நாடாளு மன்ற உறுப்பினர் பிரஃபுல் படேல், 'எங்களுக்கு இது பயங்கரமான அதிர்ச்சிதான். எங்கள் வருத்தம் சொல்லி முடியாது!' என்று வெளிப்படையாகவே குமுறி விட்டார்.

## அர்ஜுன்சிங்கின் 'நரசிம்மாவதாரம்!'

நரசிம்மராவுக்கு இன்னொரு அச்சுறுத்தல் அர்ஜுன்சிங் வடிவத்தில் உள்ளது. குறிப்பாக, அயோத்தி சம்பவங்களுக்குப் பிறகு அவர் எடுத்த 'நரசிம்மாவதாரம்' காரணமாகத்தான் நாலு பாரதிய ஜனதா அரசுகள் பதவி இழந்தன என்பது எல்லாரும் அறிந்த ரகசியம். ராவ் தைரியமாக ஒரு நிலை எடுத்து, பாரதிய ஜனதா கட்சியின் முக்கியஸ்தர்கள் விடுத்த சவாலை முறியடிக்கும் நெஞ்சுறுதியோடு செயல்படவில்லை என்று அர்ஜுன்சிங் பிரதமர் மீது குற்றம் கூறியதோடு நின்று விடாமல், சமீபத்தில் கூட பம்பாய் சென்று, தொழிலதிபர்களையும் அறிவு ஜீவிகளையும் சந்தித்து உரையாடியதில் ஏதோ அரசியல்



இருக்கிறது என்று பார்வையாளர்கள் எளிதாக ஊகிக்கவும் இடம் அளித்திருக்கிறார்.

சமீபத்தில், பத்திரிகையாளர்களுக்கு வெளிப்படையாகவே பேட்டி அளித்திருக்கிறார் அர்ஜுன் சிங்.

''ஏப்ரல் 92 முதல் ஏப்ரல் 93 வரை நடந்தவற்றை ஒருமுறை நாம் நம் கண் முன்னே நிறுத்திக் கொண்டு, எங்கே தவறு செய்தோம் என்று பார்க்க வேண்டும். இது யாரையும் குறைகூறுவதற்கு அல்ல. தவறு நிகழ்ந்திருப்பின் எங்கே தவறு என்று கண்டுணர வேண்டும். ஏப்ரல் 92-ல் நடந்த காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில், மதத்தோடு அரசியலைக் கலக்கும் தீய சக்திகளை எதிர்த்துப் போராட வேண்டும் என்று தீர்மானம் போட்டோம். ஆனால் 1993 ஏப்ரலில், துரதிர்ஷ்டவசமாக, அதே மத-அரசியல் கும்பல் பவாதிகள் ஒரு ஆவேசத்துடன் அரசியலை ஆக்ரமித்துக் கொண்டிருக்கும் அவலத்தைப் பார்க்க நேர்ந்தது. காங்கிரஸ் ஒன்றுதான்

# அர்ஜுன் சிங் தொடுக்கும் அம்புகள்!



அரசியல் அளவில் அர்ஜுன் சிங்கைத் தாம் சமாளிக்க வேண்டும் என்றால் பிப்ரவரி 25 ஆம் தேதி, பி.ஜே.பி. நடத்தத் திட்டமிட்டிருந்த பேரணியை முறியடிப்பது ஒன்றே வழி என்று கண்டுகொண்டிருந்தார் பிரதமர். இதனால்தான் தமது இரு கைகளாக விளங்கிய சவாண், ராஜேஷ் பைலட் இவர்களோடு இணைந்து செயல்பட்டார். அண்டை மாநிலங்களிலிருந்து ஏறக்குறைய ஒரு லட்சம் போலீஸ்காரர்களை தில்லிக்குக் கொண்டு வந்து குவித்தார். பேரணி நடக்கவிருந்த 'போட் கிளப்' முள்வேலியால் அடைக்கப்பட்டது. 25-ஆம் தேதிக்கு முதல் நாளிலிருந்தே தலைநகரில் வீதிக்கு வீதி போலீஸ் நிறுத்தி வைக்கப்பட்டது. முக்கிய வீதிகளில் போக்குவரத்து தடைசெய்யப்பட்டது. பேரணியும் பிசுபிசுத்துப் போனது.

அதே சமயத்தில் அர்ஜுன் சிங் தமது சொந்த மாநிலமான மத்திய பிரதேசத்தில் ஊர் ஊராகச் சென்று தமக்கு ஆதரவு திரட்டிக் கொண்டிருந்தார். ஏறக்குறைய இரண்டேகால் லட்சம் ஜனத் தொகையுள்ள பிலாஸ்பூரிலிருந்து வெளிவரும் ''தைனிக் லோகேஸ்வர்'' என்ற தினசரியில் அர்ஜுன் சிங்கைத் தங்கள் ஊருக்கு வரவேற்று, அவர் புகழ் பாடி பிப் 17-ஆம் தேதி பக்கம் பக்கமாக விளம்பரங்கள் வந்தன. அவருக்குக் கொடுக்கப்பட்ட அடைமொழிகள் சில : 'மக்கள் தலைவர்', 'தாழ்த்தப் பட்டோரைத் தலைநிமிர்த்த வந்த தனிப் பெரும் தலைவர்', 'பிற்போக்காளருக்குச் சாவு மணி அடிக்கும் செம்மல்', 'மதவெறியருக்கு மாற்றாக வந்த மகான்!' விளம்பரங்கள் கொடுத்தவர்களில் அநேகர் அர்ஜுன் சிங் தயவால் லட்சாதிபதி ஆனவர்கள்!

தமது சொந்த மாநிலத்தில் தன் ஆதரவாளர்களைக் கைப்பிடிக்குள் வைத்திருந்தால்தான் தமது செல்வாக்கு பிற மாநிலங்களில் பரவும் என்பதைக் கணித்து, ஒரு திட்டப்படி செயல்பட்டு வருகிறார் சிங். பல கூட்டங்களில் பி.ஜே.பி.யினரை 'மத வெறியர்கள், பிற்போக்குவாதிகள்' என்றெல்லாம் வர்ணிக்கிறார்.

மதவெறிக்கு எதிராகப் போர்க்கொடி உயர்த்திய இவர், உண்மையில் தீவிர மத நம்பிக்கையும், ஏன், சிற்சில மூடநம்பிக்கைகளும் கொண்ட அரசியல்வாதி. மத்தியப் பிரதேசத்திலுள்ள பிந்த் என்ற மாவட்டத்தில் தத்தியா என்ற ஊருக்கு அடிக்கடி தனி விமானத்திலும், ஹெலிகாப்டரிலும் பறக்கும் இவர், அங்கு போவது சில சாதுக்களையும், யோகிகளையும் சந்தித்து பூஜைகளும், யாகங்களும் செய்வதற்கே. தமது குருவான மௌனிபாபாவின் அனுமதியின்றி இவர் எந்த அரசியல் முடிவையும் எடுப்பதில்லை. எனவே, ''இவர் பி.ஜே.பி.யினரைச் சாடுவது, ஒரு சந்தர்ப்பவாத அரசியலே'' என்கிறது கக்லாவின் தலைமையில் இவருக்கு எதிராக ம.பி. காங்கிரஸுக்குள் உருவாகியுள்ள ஓர் அணி. கூடவே, இவரது ஆட்சிக் காலத்தில்

* பி.ஜே.பி. பேரணியைத் தடுக்க
போட் கிளப் மைதானத்தைச் சுற்றி முள்வேலி



## வடக்கு வாசல்

ம.பி.யில் நடந்த கர்ஹத் லாட்டரி ஊழலும், இவர் சொந்தத்தில் ஒரு பளிங்கு மண்டபம் கட்டிய விவகாரமும் இவரது எதிரணிக்குக் கூடுதல் பக்கபலம்.

தமக்குத் தென் மாநிலங்களிலோ, அன்றி உ.பி., பீகார், ராஜஸ்தான் போன்ற வட இந்திய மாநிலங்களிலோ போதிய ஆதரவு இல்லை என்பதை நன்கு அறிந்தவர் அர்ஜுன் சிங். தம் சொந்த மாநிலத்திலேயே மாதவராவ் சிந்தியாவைத் தம் பக்கம் இழுக்கப் பார்த்தார். இன்றுவரை அவர் பிடி கொடுக்கவில்லை. மகாராஷ்டிரத்தில் நாயக் பதவி விலக, அந்துலே போன்றவர்கள் தயவால்தான் அங்கு காலூன்ற முடியும் என்று உணர்ந்தார் இவர். அதனால்தான், பம்பாய் சென்று அங்குள்ள முஸ்லீம் தலைவர்களைக் கண்டு பேசி வந்திருக்கிறார்.

சொந்த அளவில் தமக்கு அரசியல் ஆணிவேர் இல்லை என்றாலும், பிரதமர் எதிலும் ஒரு முடிவெடுக்கக் காட்டும் தாமதத்தால் எல்லோரது வெறுப்பையும் பெற்று, விலகக் கூடிய நிலைக்குத் தள்ளப் படுவார் என்று எதிர்பார்க்கிறார் இவர். அப்போதைய அரசியல் வெற்றிடத்தை நிரப்ப, தலைமைப் பதவிக்குத் தம்மைத் தயார்ப் படுத்திக் கொண்டு வருகிறார்! அவ்வப் போது வடக்கு, தெற்கு என்று வேறு பிரித்துப் பேசப்படுவதால் 'அடுத்த தலைமைக்கு ஒரு வட இந்தியரே தேவை' என்றும் பிரசாரம் செய்து வருகிறார்கள் இவரைச் சார்ந்தவர்கள்.

'ஒருவரே இரு பதவிகள் வகிக்கக் கூடாது' என்று, பிரதமர் காங்கிரஸ் தலைவராகவும் பொறுப்பு வகிப்பதை எதிர்த்துக் குரல் எழுப்பினார். பிப்ரவரி மாதத்திலேயே காங்கிரஸ் காரியக் கமிட்டியின் கூட்டம் நடைபெற வேண்டும் என்று முயற்சி மேற்கொண்டார். இதிலெல்லாம் இவர் எதிர்பார்த்த வெற்றி கிடைக்கவில்லை. அதே நேரத்தில் மன்மோகன் சிங்கின் பட்ஜெட்டும் பொதுவாக வரவேற்பைப் பெற்றிருப்பதால், மறுபடியும் பிரதமரின் கைதான் ஓங்கி இருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

ஆனால் அர்ஜுனின் அம்புகள் பிரதமர் மீது அவ்வப்போது தொடுக்கப்பட்டுக் கொண்டேதான் இருக்கும்.

– ராஜீவி நரசிம்மன்

காஷ்மீர் முதல் கன்யாகுமரி வரை அறிந்த கட்சி. காங்கிரஸ் இவர்களைக் கட்டுப் படுத்துவதில் தோல்வியுற்றால், நாட்டின் கதியே அதோகதிதான்!''

வெளிப்படையாகப் பார்த்தால் அர்ஜுன்சிங் சொல்லுவதில் என்ன தவறு என்று தோன்றும். ஆனால் இவர் சொல்லுவதில் உள்நோக்கம் ஏதோ இருக்கிறது என்று அர்ஜுன் சிங் எதிர்ப்பாளர்கள் ஒருமுகமாகச் சொல்லுவதற்கும் ஒரு காரணம் இருக்கிறது.

''நரசிம்மராவ் மெத்தனமானவர். கடினமான முடிவுகளை எடுக்கத் தயங்குகிறவர். இவர் ஒருவித முடிவுக்கும் வராமல் பிரச்னைகளை ஒத்திப் போடப் போட, அவை பூதாகரமாகி விடுகின்றன. கைமீறிப் போய் விடுகின்றன'' என்பது அர்ஜுன் சிங்கின் குற்றச்சாட்டு.

''இது அபாண்டம்!'' என்கிறார்கள் ராவ் ஆதரவாளர்கள். அர்ஜுன் சிங்கின் இந்தப் போக்கு, ஏதோ தாம் மட்டுமே காங்கிரசில் நாட்டு நலனில் அக்கறை உள்ளவர் போலவும், பிரதமர் இவரை அலட்சியமாகக் கருதுகிறார் என்பது போலவும் ஒரு தோற்றத்தை உருவாக்கியிருக்கிறது. இதுவே காங்கிரசில் அவரது நிலையைத் தனிமைப்படுத்தியும் இருக்கிறது. நரசிம்மராவை ஒரேயடியாகப் பகைத்துக் கொள்ள காங்கிரசில், விரல் விட்டு எண்ணக் கூடியவர்களே இருக்கிறார்கள்.

### தீவிர பி.ஜே.பி. – மோதல்

ஆனால் பைபாஸ் சர்ஜரி செய்து கொண்ட இதய நோயாளியான அர்ஜுன் சிங், தம் குரல் தனிமையில் ஒலித்தாலும், மத அரசியலை எதிர்த்து, காங்கிரசிலிருந்து எழும் ஒரே குரல் தம்முடையதே என்பதில் அதீதப் பெருமை கொண்டிருக்கிறார்.

காங்கிரசில் உள்ள நரசிம்மராவ் ஆதரவாளர்கள், அர்ஜுன் சிங்கின் தீவிர 'பி.ஜே.பி மோதல்' கொள்கையை ஆதரிக்கவில்லை. காரணம், அது ஒரேயடியாய் காங்கிரசை இந்து எதிர்ப்புக் கட்சியாகச் சித்திரிக்கும். இரண்டாவது, முஸ்லிம்கள் நரசிம்மராவ் எதிர்ப்பாளர்களாக இருக்கலாம்; ஆனால் காங்கிரஸ் எதிர்ப்பாளர்கள் அல்ல; அர்ஜுன் சிங்கின் ஆதரவாளர்களும் அல்ல. இந்தப் பின்னணியில், கட்சிக்குள் அர்ஜுன் சிங்கைப் பிரதமர் ஆக ஏற்கும் அளவுக்கு யாருக்கும் தைரியமில்லை.

### முறுக்கேறும் மூவரின்

### சாணக்கியம்!

மகாராஷ்டிர முதல்வராக இருந்து




**பம்பாய்க் கடிதம் :**

# பதுங்கியிருக்கிறார் பவார்!

சிவசேனாவை உடைத்து, புஜ்பால் குழுவினரை தம் மந்திரி சபையில் சேர்த்துக் கொண்ட பின்புதான் நாயக்கிற்கு தன்னம்பிக்கை பெருகி, பவாரிடமிருந்து சிறிது சிறிதாக விலக ஆரம்பித்தார். சவாணிடம் நெருக்கமானார்.

பவார் ஆதரவு அமைச்சர்கள் பதினோரு பேரை நாயக் பதவி நீக்கம் செய்தார். அப்போது பவார் சீனாவில் இருந்தார். அவர் திரும்பி வந்த சில நாட்களுக்கெல்லாம் அயோத்தி நிகழ்ச்சி, பம்பாய்க் கலவரம் என்று தொடர்ந்து இருந்ததால் ஒன்றும் நடவடிக்கை எடுக்க முடியவில்லை. கலவரத்திற்குப் பின்பாவது நாயக் நீக்கப்படுவார் என்று எதிர்பார்த்ததும் சவாணின் ஆதரவு காரணமாகப் பிசுபிசுத்துப் போனது.

பிப்ரவரியில் நாயக் மேலும் ஆறு மந்திரிகளை நீக்கியதும் பவார் ஆதரவாளர்கள் கொதித்தெழுந்தனர். தொடர்ந்து மேலிடக் குழு ஒன்று விசாரணைக்காக அனுப்பப்பட்டது. அவர்களின் விசாரணை முடிவு நரசிம்மராவிடம் கொடுக்கப்பட்டது. அவர்கள் எழுதியது இன்னது என்று தெரியவரவில்லையாயினும், பெரும்பாலான எம்.எல்.ஏக்கள் நாயக்கிற்கு எதிராக இருந்தது தெளிவு. பத்திரிகையாளர்கள் கணிப்பின்படி 174-ல் 122 பேர் நாயக்கின் வெளியேற்றத்தை ஆதரித்தனர் என்று தெரிகிறது.

ஆயினும் நாயக்கை வெளியேற்றி சவாணின் அதிருப்தியைச் சம்பாதித்துக் கொள்ள வேண்டாமே என்று நரசிம்மராவ் தயங்கியதன் காரணமாகக் கோபமடைந்த பவார், பம்பாய்க் கலவரத்திற்கு நாயக் பொறுப்பேற்று விலகவில்லையெனில் தாம் பொறுப்பேற்று மத்திய மந்திரி சபையிலிருந்து விலகுவதாகக் கூறினார்.

நரசிம்மராவுக்கு ஏற்கெனவே நிறையத் தலைவலி. இந்த நிலையில் பவாரைக் கோபப்படுத்த விரும்பாத பிரதமர், நாயக்கை வெளியேற்ற வேண்டி வந்தது. கூடவே, சாமர்த்தியமாகப் பவாரையே மகாராஷ்டிர முதல்வராக்கி, பவாருக்கே ஓர் அதிர்ச்சியைத் தந்திருக்கிறார்.

பவார் அவசரப்பட்டு காரியத்தைக் கெடுப்பவர் அல்லர். இப்போதைக்கு நரசிம்மராவிற்குத் தொல்லை கொடுக்க மாட்டார். அவரது எண்ணமெல்லாம் மூன்று வருடத்திற்குப் பிறகு பிரதமராவதில்தான் உள்ளதேயன்றி உடனடியாகப் பிரதமரைக் கவிழ்ப்பதில் இல்லை. கவிழ்த்தாலும் லாபமடையப் போவது அர்ஜுன் சிங் என்பதை நன்கு அறிந்த சாணக்கியர் அவர்! பிரதமரைத் தற்போது ஆதரிப்பதன் மூலம் தென்னகத்து எம்.பிக்களின் ஆதரவைப் பெற நினைத்துள்ளார்.

– அம்ருதா பார்த்தசாரதி

கார்ட்டூன் : ஆர்.கே.லக்ஷ்மண்

கொண்டே டில்லி அரசியலில் தமக்கு வேண்டிய ஆதரவைத் திரட்டக் கூடிய சாமர்த்தியம் படைத்தவர் சரத் பவார் என்கிறார்கள்.

'சமயத்துக்கு ஏற்றபடி நடந்து கொண்டு, தக்க தருணத்தில் தலையை உயர்த்துவார் அர்ஜுன் சிங். அதுவரை பொறுமையாகக் காத்திருக்கும் சாணக்கியம் இந்த மத்தியப் பிரதேச அரசியல் வாதிக்குக் கைவந்த கலை' என்கிறார் மதுலிமயே.

பிப்ரவரி 25 ஆம் தேதி பாரதீய ஜனதா பேரணியை நடக்கவொட்டாமல் செய்து, 'தாமும் மனம் வைத்தால் தீவிர நடவடிக்கை எடுக்கக் கூடியவர்தாம்' என்பதை நரசிம்மராவ் நிரூபித்து விட்டதில் அவர் கை பலமாக ஓங்கியிருப்பதாகவும் சொல்லுகிறார்கள். தமக்குப் போட்டியாக வரக்கூடியவர் என்று நினைக்கப்பட்ட சரத்பவாரை, மத்திய அமைச்சர் பதவியை விடுத்து 'மகாராஷ்டிர முதல்வராக மறுபடி போங்கள்' என்று துணிந்து சொல்லக்கூடிய தைரியமும் நரசிம்மராவுக்கு இருந்ததை எடுத்துக் காட்டுகிறார்கள்.

அடுத்த குறி அர்ஜுன் சிங்தான் என்கிறார்கள் அரசியல் பார்வையாளர்கள். அவரையும் மத்திய பிரதேச அரசியலுக்கு விரட்டி விட்டு, தம்மை இனி யாரும் அசைக்க முடியாது என்று நரசிம்மராவ் காண்பிப்பது உறுதி என்கிறார்கள்.

நரசிம்மராவின் குறி அதுவானாலும் பவார், அர்ஜுன் சிங்கின் குறி பிரதமர் நாற்காலியாகத்தான் இருக்கிறது!

– சாருகேசி

அட்டை வண்ணப்படம் :
'ஸ்கார்ப்' நியூஸ்

# T. S. S. NIDHI LTD

ESTD 1973

THIRUMYLAI SASWATHA SAHAYA NIDHI LIMITED
Regd. Office: 230, R. K. Mutt Road, Mylapore, Madras 600 004. Phone: 77503.
THIRUVANMIYUR BRANCH : 112, Thiruvalluvar Salai, Kamraj Nagar, Madras 600 041.

## DEPOSIT SCHEMES

### FIXED DEPOSIT SCHEME

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| Period (months) | Rate of Interest P.A. | CASH INCENTIVE |
|---|---|---|
| 6 | 15 % | not applicable |
| 12 | 17 % | 1/2 % |
| 24 | 18 % | 1 % |
| 36 | 19 % | 1 1/2 % |
| 60 | 20 % | 2 % |

### KARPAGA VIRUTCHAM DEPOSIT SCHEME
(Re-Investment Plan)

(Minimum of Rs. 1000/- and in Multiples of Rs. 500/-)

| DEPOSIT AMOUNT RS. | PERIOD (Months) | MATURITY VALUE RS. | CASH INCENTIVE |
|---|---|---|---|
| 1000 | 12 | 1180 | 1/2 % |
| 1000 | 24 | 1425 | 1 % |
| 1000 | 36 | 1760 | 1 % |
| 1000 | 45 | 2025 | 1 1/2 % |
| 1000 | 67 | 3025 | 2 % |

### HIGHLIGHTS:

* Recognised as a **NIDHI COMPANY** by Central Government of India.
* Company is in 20th year of Service.
* Monthly interest warrants for the financial year would be despatched in advance at the beginning of the year for fixed deposits.
* No tax deduction at source if the fixed deposit holders submits 15 H in case. For any financial year interest exceeds Rs. 2500/-.
* Loan facility upto 75 % on Fixed Deposit and 85 % on Recurring Deposit paid-up amount.
* Pre-mature repayment facility as per terms and conditions
* Your Deposit amount is advanced against Gold Jewels and immovable properties of Madras city limits.
* Transaction with members only.
  (Rupees Two only for Membership.)

### JEWEL LOAN

Jewel loans granted on Gold ornaments at Rs. 255/- per gram i.e. Rs. 2040/- per sovereign (8 gm).

Recurring Deposit not required.

## SENIOR CITIZEN DEPOSIT SCHEME 19 % p.a.

(APPLICABLE FOR AGED PERSONS ABOVE 55 YEARS, PENSIONERS, HANDICAPPED, WIDOWS, EDUCATIONAL AND CHARITABLE ORGANISATIONS.)

**Minimum Deposit Rs. 10000/-** **Period - 12 months.**

### RECURRING DEPOSIT SCHEME

(Minimum of Rs. 10/- and in Multiples of Rs. 10/-)

| MONTHLY DEPOSIT | 100 | 100 | 100 | 100 | 100 | 100 |
|---|---|---|---|---|---|---|
| PERIOD (Months) | 12 | 24 | 36 | 48 | 60 | 72 |
| MATURITY VALUE | 1310 | 2850 | 4650 | 6710 | 9050 | 11,580 |

### SAVINGS DEPOSIT SCHEME 9%

| | BUSINESS HOURS | | WEEKLY HOLIDAY |
|---|---|---|---|
| | WEEK DAYS | SUNDAYS | |
| HEAD OFFICE Mylapore | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | FRIDAY |
| BRANCH OFFICE Thiruvanmiyur | 9 am - 12.30pm<br>2.30 pm - 5 pm | 9 am to 12.30pm<br>- | TUESDAY |

**K. R. V. RAMANI**
President

**G. KUMARAVELU**
Vice-President

**P. S. SAMBASIVAM**
Secretary

## பெங்களூர் ரிப்போர்ட் :

# அமைச்சரின் தாமதத்துக்குப் பரிசு!

●● கர்நாடகப் பகுதிக்கு உட்பட்ட தேசிய நெடுஞ்சாலைகளின் ஓரமாயிருக்கும் அத்தனை மதுக்கடைகளும் ஜுலை முதல் தேதியிலிருந்து மூடப்பட்டு விடும் என்று அறிவித்திருக்கிறார் வீரப்ப மொய்லி. அந்த மதுக்கடைகள் வாகனம் ஓட்டுபவர்களுக்கு மாயவலை வீசிக் கவர்ந்து விபத்துக்களுக்குக் காரணமாயிருக்கும் என்பதால் இந்த முடிவு. தேசிய நெடுஞ்சாலையிலிருந்து இருநூறு மீட்டர் சுற்றளவுக்கு எங்கேயும் மதுக்கடைகள் இருக்கக் கூடாது என்பது உத்தரவு. இந்தியா பூராவுக்கும் போட வேண்டிய உத்தரவு அல்லவா இது?

●● மடோன்னாவையும் பாய்ஜார்ஜையும் ஸ்டார் டீ.வி.யில் பார்த்துக் கொண்டிருந்தவர்கள் மீது கேளிக்கை வரி விதித்து விட்டது கர்நாடக அரசு. டிஷ் ஆன்டெனா தொடர்பு வைத்திருப்பவர்கள் ஒரு வீட்டிற்கு மாதம் இருபது ரூபாய் அரசுக்கு வரிசெலுத்த வேண்டும். கேபிள் டீ.வி. மட்டும் இருந்தால் பதினைந்து ரூபாய். டிஷ் ஆன்டெனா, கேபிள் இரண்டும் இருந்தால் இருபத்தைந்து ரூபாய்.



* சாகிர் அகமது : தாமதத்துக்குப் பரிசு!

●● ஒரு நாள் கிரிக்கெட் ஆட்டத் தினத்தன்று ஸ்டேடியம் வந்து டிக்கெட் வாங்கின ரசிகர்களுக்குக் கிடைத்த பதில் : ''உள்ளே இடமில்லை. ஸ்டேடியம் ஏற்கெனவே ஃபுல்.'' விளைவு : விபரீதக் கலவரமாகி விட்டது.

''நாற்பத்தைந்தாயிரம் பேர் மட்டுமே அமரக்கூடிய ஸ்டேடியத்தில் அன்றைக்கு அனுமதிக்கப்பட்டிருந்தவர்கள் அறுபதாயிரத்திற்கும் மேல். இப்படியிருக்க இன்னும் 'நிஜ டிக்கெட்டு' வாங்கியவர்களையும் உள்ளே விட்டிருந்தோம் என்று வைத்துக் கொள்ளுங்கள்... கூரையோ சுவரோ இடிந்து விழுந்து நூற்றுக்கணக்கான பேர் இறந்து போகும் விபரீதம் நிகழ்ந்திருக்கும்'' என்றார் ஒரு போலீஸ் அதிகாரி.

ஏராளமான போலி டிக்கெட்டுகள் அச்சடிக்கப்பட்டு விற்பனையாகியுள்ளன என்பது குற்றச்சாட்டு. அரசு விசாரணைக்கு உத்தரவிட்டிருக்கிறது. நிஜ டிக்கெட்டுகள் வாங்கி உள்ளே போக முடியாமல் போனவர்களுக்கு ரீஃபண்ட் செய்கிறார்கள்... இரண்டே நாட்களில் மூன்று லட்சத்து ஐநூறு ரூபாய்க்கும் மேலே திருப்பித் தந்திருக்கிறார்கள்.

பவுண்டரி லைனில் நின்று கொண்டிருந்த இங்கிலாந்து ஆட்டக்காரர்களைப் பரிகசித்து அவர்கள் மீது (கற்கள் உட்பட) கண்ட பொருட்களையும் வீசி எறிந்தார்கள், ''ரசிகர்கள்''. இந்தியா தோற்கப் போகிறது என்ற நிலைமை தோன்ற ஆரம்பித்ததுதான் தாமதம். ஆங்காங்கே போகி கொண்டாட ஆரம்பித்து விட்டார்கள். தீ வைத்துக் கொண்டு... கூத்தாடிக் கொண்டு... சே! போலி டிக்கெட் பெற்று வந்தவர்களிடம் வேறென்ன எதிர்பார்க்க முடியும்?

●● அமைச்சர் சாகிர் அகமது சிக்மகளூரில் நடந்த ஒரு விழாவுக்கு இரண்டரை மணி நேரம் தாமதமாகப் போனார். மேடையில் ஏறினார் ஒரு கிராமவாசி. ''அமைச்சருக்கு இந்த சுவர்க் கடிகாரத்தை இந்த கிராம வாசிகளின் சார்பில் அன்பளிப்பாக அளிக்கிறேன்'' - என்றார். அமைச்சர் பெற்றுக் கொண்டு மகிழ்ச்சியாக உட்கார்ந்தார். மைக்கில் தொடர்ந்தார் கிராம வாசி : ''ஏனெனில் அமைச்சருக்கு நேரத்தின் மதிப்பு தெரியவில்லை. நேரம் பொன் போன்றது என்பதை அவர் உணர வேண்டும். இதில் வினாடி முள் நகரும் ஒவ்வொரு நொடியும் எவ்வளவு அவசியமானது என்பதை உணர்ந்தால் மட்டும் போதாது; அந்த ஒவ்வொரு நொடியும் தமது பதவிக் காலத்தைக் குறைக்கச் செய்யும் நொடிகள் என்பதையும் அவர் உணர வேண்டும்'' - என்று பேசி விட்டு இறங்கினார். அமைச்சரின் முகத்தில் ஈயாடவில்லை.

- பெர்னாண்டஸ்

# எண் விளையாட்டு - 2

# பரிசு ரூ. 250

அடுத்த வாரம் வேறு விளையாட்டுக்குத் தாவலாம். இந்த வாரம் மறுபடி எண் விளையாட்டேதான். போன வாரம் ஏழு; இந்த வாரம் பத்து. தசாவதாரம் போல் பத்து என்றதும் இன்னும் என்ன என்னவெல்லாம் நினைவு வருகிறது? பத்து என்ற எண் தொடர்புள்ள விஷயங்களாகக் கீழே பட்டியலிடுங்கள். முப்பதுக்கு மேல் பட்டியல் நீளுகிறது என்றால் மட்டுமே தனித் தாளிலும் எழுதி இணையுங்கள். மிக அதிகமான அம்சங்களை அடித்தல் திருத்தல் இன்றிக் கச்சிதமாக எழுதியவருக்கு ரூ. 250/- பரிசு. விலாசம் எழுதி இந்தப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பக் கடைசித் தேதி 31.3.93. உறை மீது "எண் விளையாட்டு - 2" என்று அவசியம் குறிப்பிடவும். ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.

1. தசாவதாரம்
2.
3.
4.
5.
6.
7.
8.
9.
10.
11.
12.
13.
14.
15.
16.
17.
18.
19.
20.
21.
22.
23.
24.
25.
26.
27.
28.
29.
30.

பெயர் : ..........................................................................

விலாசம் : ..........................................................................

..........................................................................

சார்மினார் சானல் :

# பிரதமர் ஏன் சிரிப்பதில்லை?



பிரதமரின் வங்காரா கிராமத்தில் அவரது மூதாதையர் கட்டிய வீட்டைக் காக்க ஏராளமான காவற்படை இருப்பது தெரிந்ததே. செலவினமும் லட்சக்கணக்கில். ஆனால் ஊர்க்காரர்கள் ஒரு கல்யாணம், விசேஷம் நடத்த முடியாமல் நெளிகிறார்கள். யார் புதிதாக வந்தாலும் செக்யூரிட்டி சோதனை. 'ஐயோ நரசிம்மராவ் எதற்காக இந்த கிராமத்தில் பிறந்தார்?' என்ற அலுப்பு வங்காராவாசிகளுக்கு.

இது குறித்து, ஆந்திர சட்டசபையில் பி.ஜே.பி. அங்கத்தினர் ஸ்ரீ வித்யாசாகர ராவ் ஒரு அருமையான(!) யோசனையைத் தெரிவித்தார். 'அந்தப் புராதன வீட்டிற்கு 'கரசேவை' செய்யலாமா என வினவினார். புரியவில்லையா? ஒருவரும் குடியிராத அதனைத் தரைமட்டம் ஆக்கி விட்டால், பிரச்னைகள் முடிவு பெறுமாம்! கரசேவை யோசனைக்கு ஏக கரவொலி!

இன்னொரு சூடான விவாதத்தைத் தெலுங்கு தேசம் துவக்கியது. ஆந்திர அரசு நரசிம்மராவ் குடும்ப அங்கத்தினர் 22 பேருக்கு உடல்நலம் கவனிக்க பதினான்கு டாக்டர்களை நியமனம் செய்தது. அவ்வளவு பேரும் ஸ்பெஷலிஸ்டுகள். பிரதமர் குடும்பத்திற்கு இத்துணை ஆடம்பரமா? ஜுரம் போல் ஏறி எதிர்க்கட்சிகள் வாதம் சூடானது.

பிரதமரின் புதல்வர் கல்வி அமைச்சர் பி.வி. ரங்காராவ் வெளியூர் சென்றால் செக்யூரிட்டி செலவு, வானளாவுகிறது. பிரதமர் தமது கிராமத்தில் நில உச்ச வரம்புக்கு மேல் பினாமி பெயரில் பூமி வைத்திருக்கிறார் என்ற விமர்சனம்.

அவரது மற்றொரு மகன் பிரபாகரராவ் டைரக்டராக உள்ள கோல்டு ஸ்டார் நிறுவனம் தொடர்பான குற்றச்சாட்டு. இந்தக் கடன் விவகார ஊழலில் அந் நிறுவனத்தின் இன்னொரு டைரக்டரும் ஆந்திரா வங்கி நிதி நிறுவனமும் ஷேர் புரோக்கர் ஹிதன் தலாலும் சம்பந்தப்பட்டிருப்பதாகத் தெரியவருகிறது.

நரசிம்மராவ் சிரிப்பதே இல்லையே என்று பத்திரிகைகள் அழுகின்றன. குடும்பம் இவ்வளவு சிரிப்பாய்ச் சிரிக்கும் போது எப்படி ஐயா அவரால் சிரிக்க முடியும்?

●● ஆந்திர அரசின் வன இலாகா இரு டஜன் மான்களை ஐதராபாத் நேரு மிருகக் கண்காட்சி சாலையில் விட்டு வைத்தது. துள்ளித் திரியும் அந்தப் புள்ளி மான்கள் இருக்கும் இடம், ஐந்து சிங்கங்கள் உலவும் அடைப்பில். மான்களைக் கண்டும் ஒன்றும் செய்யவில்லை சிங்கங்கள். உயிரியல் பூங்காவின் அதிகாரி விளக்குகிறார். ''வேந்தனுக்கு வேண்டிய அளவு உணவு போடுகிறோம். பசித்தால் தவிர சிங்கம் இரையைக் கொல்லாது...'' எனவே அவை இணைந்து வாழ்கின்றன. ஒரு சிங்கங்கூட ஒரு மானைக் கொல்லவில்லை.

சிங்கராஜனுக்கு உள்ள இந்தப் பெருந்தன்மை மனிதன் உள்பட இதர சில மிருகங்களுக்குக் கிடையாது!

– சுபஸ்ரீ


ஆட்சி கலைப்பு
நாடாளுமன்றத்தில் ஆதரவு வாபஸ்
ஜெயலலிதா
நரசிம்மராவ்
கோவிந்தாச்சாரியா
பண்ணலும், பண்ணலும், நாங்க கூட இப்படித்தான் பாதபூஜை பண்ணினோம், உதை வாங்கற வரைக்கும்!...
வாழப்பாடி


சரத் பவார்
டெல்லி டெலஸ்கோப்...



கல்கி



1993
மார்ச் 21
மலர் : 51
இதழ் : 34
ஆங்கீரச
பங்குனி 8

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்றுகும்பிடடி
பாப்பா. -பாரதியார்.

# அத்வானி திராவிட முன்னேற்றக் கழகம்!

தேர்தலுக்குப் பின் தி.மு.க. ஆட்சி அமைந்த கையோடு, "தேன் நிலவு முடிந்தது" என்று அறிக்கை விட்டார் ராஜாஜி. அன்றைய அரசின் போக்கை உடனடியாக விமர்சிக்கவும் ஆரம்பித்தார். தேர்தல் கூட்டணி என்பது வேறு. சட்டமன்றத்தில் தோழமைக் கட்சியாக அமர்ந்தவாறே ஆக்க பூர்வமான எதிர்ப்புப் பணி ஆற்றுவது வேறு என்பதை உணர்த்தினார். இதே கௌரவமான போக்கை அ.தி.மு.க., காங்கிரஸ் இரண்டுமே சட்டமன்றத்திலும் நாடாளுமன்றத்திலும் இன்று கையாண்டிருந்தால் நாடு நலமுற்றிருக்கும். ஆனால் தற்போது சட்டமன்றத்துக்குப் போய்ச் சேர்ந்த காங்கிரஸ் எம்.எல்.ஏக்கள் பாதபூஜை செய்யாத குறையாக 'ஜெ' துதி செய்தார்கள். அதன் விளைவு, 'ஜெ' ஆட்சியின் தவறுகளை இனியும் எடுத்துக்காட்டாவிட்டால் காங்கிரஸ் பரிகசிக்கப்படும் என்ற நிலை ஏற்பட்ட போது, காங்கிரஸின் விமர்சனங்களை 'ஜெ'யினால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. அவர் பதிலடி கொடுக்க ஆரம்பித்தார். மனக்கசப்பு வளர்ந்தது.

மாநில காங்கிரஸ் தலைமையை ஆரம்பத்தில் கட்டுப்படுத்தி வந்த பிரதமர், பிறகு கட்டுப்பாட்டைத் தளர்த்தி விட்டார். அவரது அனுமதி இன்றியேதான் வாழப்பாடியாரும் இவ்வளவு தூரம் 'ஜெ' ஆட்சியைத் தாக்கிப் பேசினார் என்பதை நம்புவது கஷ்டம். பிரதமரின் இந்தப் போக்கைப் புரிந்து கொள்வதும் எளிதே. தமிழக விஜயங்களின் போது மத்திய அமைச்சர்கள் மட்டுமின்றி, பிரதமரே கூட அ.தி.மு.க. தொண்டர்களால் அவமானப் படுத்தப்பட்டிருக்கிறார். அதைப் பார்த்துக் கொண்டு 'ஜெ' சும்மா இருந்தது டன், "தலைமுறை இடைவெளி" என்றும் பேட்டி அளித்தார். தில்லியில் அத்வானியைச் சந்தித்து விட்டு, தேசிய ஒருமைப்பாடு குழு கூட்டத்தில் கர சேவையை ஆதரித்துப் பேசினார். இவையெல்லாம் பிரதமருக்கு ஏமாற்றத்தையும் மனக்கஷ்டத்தையும் அளித்தே இருக்கும். தொடர்ந்து தமது ஆட்சியின் குறைபாடுகளுக்கெல்லாம் மத்திய அரசு மீது பழி போடுவது 'ஜெ'க்கு எளிதாகிப் போயிற்று. படிப்படியாக வளர்ந்த விரோத பாவங்களின் உச்ச கட்டமே இன்றைய கூட்டணி முறிவு.

தோழமைக் கட்சி என்ற நிலை மாறிய பிறகு, கீரியால் பாம்புக்கு ஆபத்தா, பாம்பினால் கீரிக்கு ஆபத்தா என்று கூற முடியாத சூழல் ஏற்பட்டிருக்கிறது. இது இரு கட்சிகளுக்கும் பின்னடைவு என்பது மட்டுமல்ல; தேசத்துக்கே பின்னடைவு.

கூட்டணி தளர்ந்ததில் பி.ஜே.பிக்குக் கொண்டாட்டம். காங்கிரஸ் செய்த தவறுகளையே அதுவும் செய்ய ஆரம்பித்துள்ளது. மாநிலக் கட்சிகளுக்கு மாநில ஆட்சிகளைப் பலிகொடுத்தேனும் மத்தியில் ஆட்சியைப் பிடித்தால் போதும் என்ற குறுக்கு வழியைப் பின்பற்றத் தீர்மானித்திருக்கிறது. தமிழகத்தில் அ.தி.மு.க.வுக்கு மட்டுமின்றி ஆந்திராவில் தெலுங்கு தேசத்துக்கும் வலைவிரிக்கிறது. இதில் உள்ள ஆபத்துக்களை உணர்ந்து, என்.டி.ஆர். சற்று விழிப்புடனிருந்தாலும் பி.ஜே.பியின் மாய வலையில் ஜெயலலிதா சிக்கி விட்டதாகவே தோன்றுகிறது. காங்கிரஸுடன் ஏற்பட்ட முறிவு ஒரு பழிவாங்கும் உணர்வைத் தோற்றுவிக்க, அதன் உந்துதலால் பி.ஜே.பியுடன் இணைவது உணர்ச்சிக்கு ஒத்தடம் தருவதாக இருக்கலாமே தவிர, அறிவுக்குப் பொருந்தாது. பி.ஜே.பி.யின் கொள்கைகளுக்கும் பெரியார், அண்ணா வழி வந்த திராவிட இயக்கத்தின் கொள்கைகளுக்கும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வித்தியாசம் உண்டு. இதை மறந்து பி.ஜே.பி.யுடன் 'ஜெ' கூட்டணி அமைப்பாரானால் அ.தி.மு.க. உடைவது உறுதி. பதவிக்காகவும் பணத்துக்காகவும் 'ஜெ'யுடன் இன்று ஒட்டிக் கொண்டிருப்பவர்கள் அதே காரணங்களுக்காக அவரைக் கைவிடவும் தயங்க மாட்டார்கள். கொள்கை அடிப்படையில்தான் ஒரு கட்சி வலுவான கோட்டை எழுப்ப முடியுமே தவிர, பணத்தாசை காட்டி அல்ல. அந்தக் கோட்டையில் ஓட்டைகளே அதிகமிருக்கும்.

"அண்ணா தி.மு.க.வை அத்வானி தி.மு.கவாக மாற்றி விட வேண்டாம்" என்று நாம் மட்டுமல்ல, அண்ணா வழி வந்த, அண்ணாவை மதிக்கின்ற, எம்.ஜி.ஆரைப் போற்றுகின்ற ஒவ்வொருவருமே ஜெயலலிதாவைக் கேட்டுக் கொள்கிறார்கள்.

# விமர்சனம்

# காமிரா நகர்வலம் காமெண்ட்ரி அபத்தம்!

●● ரொம்ப உருக்கமாக ஒரு நாடகம் பண்ண ஆசைப்பட்டு, 'தவம்' என்று பெயர் சூட்டி, மரணப் படுக்கையில் இருப்பவனின் மலரும் நினைவுகளாக அமைத்திருந்தார்கள். (பீலி சிவம் நடிப்பு பற்றி தனியே ஒரு கட்டுரையே எழுதலாம்.) சின்ன வயசில் பேக்கு மாதிரி பாடப் புஸ்தகத்தைக் கட்டிக் கொண்டு அழுது விட்டு, வலிய வந்து காதலித்தவளைப் புரிந்து கொள்ளாமல், சாகிற நேரத்தில் அதை நினைத்து ஏங்கும் மனிதனின் கதை. நாடகம் பார்த்த ஒரு பாட்டியின் கமெண்ட் :

''கட்டைல போக! இத்தனை வயசுல ராமா, கிருஷ்ணான்னு இல்லாம, புத்தி போறதைப் பாரு!''

●● அருணா சாய்ராம்! சத்தியமாக ஒரு சாமானிய மனுஷ சாரீரம் இல்லை, அது! ஹைதராபாத் ஒலிபரப்பில் புதன் மாலை அவரது கச்சேரி கேட்க நேர்ந்ததில் - ரத்தம் ஒரு கணம் உறைந்து, ஓடிற்று! சென்னை சபாக்காரர்களுக்கு ஒரு வேண்டுகோள். டிசம்பரில் மட்டும்தான் பிற மாநிலக் கலைஞர்களையும் கொண்டு வர வேண்டும் என்பது சட்டமில்லையே?

* பாலு : வணிக மாலை

* அருணா : சாரீர வசதி



●● Metro Hour ல் ஹிந்தி, ஆங்கில ஆக்கிரமிப்பு பற்றி இரு வாரம் முன்பு எழுதியிருந்ததில் 50% வாபஸ் வாங்கிக் கொள்கிறேன். இந்த வாரம் கணிசமாகத் தமிழ். புதன் கிழமை சோவின், ஜட்ஜ்மெண்ட் ரிஸர்வ்ட் (பாக்யராஜ் கெட்டார்! ஏக டபுள் மீனிங்.) வியாழன் - பாரதிராஜா நேர்முகம். ('இனிய தமிழ் மக்களே'வுக்கு இருபது நிமிட வியாக்கியானம்.) திங்கள் சுகன்யா பேட்டி.

அதிருக்கட்டும் சினிமா, நாடகம் தவிர நம்மவர்களால் வேறு விஷயங்களைச் சிந்திக்கவே முடியாதா?

●● ரொம்ப நாளாக டபாய்த்து வந்த 'மூன்றாம் பிறை; இந்தவாரம் தேசிய ஒளிபரப்பில். வெள்ளைக்கவரில் தார் ஈஷினாற் போல 'சில்க்' காட்சிகள். வணிக மாயப் பிசாசு, பாலு மகேந்திராவையும் விட்டு வைக்கவில்லை!

●● கிரிக்கெட் திருவிழாக்களுக்கு ஒரு இடைவேளை. ஒரு தப்பு பண்ணி விட்டோம். கேமராவை TW1 காரர்களிடம் கொடுத்தது மாதிரி 'மைக்'கையும் கொடுத்து இருக்கலாம். மாட்சின் நடு நடுவே, கேமரா நகர் வலம் வர, சம்பந்தா சம்பந்தமில்லாமல் கமெண்ட்ரி. அடிக்கடி மாஃப் கீஜியே. சத்தியமாக ஒரு பயல் 'மாஃப் கீஜு' மாட்டான்.

●● சோமாலியா. மொட்டை மரங்கள் துளிர்க்கின்றன. வெட்டியான்களுக்கு வேலை குறைய ஆரம்பித்திருக்கிறது. சின்னக் குழந்தைகள், அபூர்வமாய் எழுந்து விளையாடுகின்றன. கரிய முகங்களில் பளீர் பற்கள். அமெரிக்க ஆதரவு பயனளிக்க ஆரம்பித்திருப்பதாக பி.பி.ஸி. சொல்லியது. மயான பூமி, மலர் வனம் ஆகட்டும். இருந்த இடத்திலிருந்தே பிரார்த்திப்போம்!

– கிச்சா

திருவனந்தபுரத்தில் ஏசுதாஸ் சம்பந்தப்பட்ட ஒரு நிறுவனத்தின் திறப்பு விழா. கேரள அமைச்சர் குஞ்ஞாலி குட்டி தலைமையில் முதல்வர் கருணாகரன் திறந்து வைப்பதாக இருந்தது. கருணாகரன் வர முடியாததால் ஏசுதாஸ் குஞ்ஞாலி குட்டியை அழைத்து, குத்துவிளக்கு ஏற்றி விழாவைத் தொடங்கி வைக்க அழைத்தார். உடனே அமைச்சர், ''தாஸ், நீங்களே விளக்கை ஏற்றி விடுங்கள்!'' எனக் கூறினார்.

அதற்கு ஏசுதாஸ், ''முதலில் ஒரு திரியை நீங்கள் ஏற்றுங்கள், மீதித் திரிகளை நான் ஏற்றுகிறேன்'' எனக் கூறினார். அதற்கும் அமைச்சர் மறுத்து, நீங்களே ஏற்றி விடுங்கள் தாஸ்'' என்றார்.

அப்போதுதான் ஏசுதாசுக்கு அமைச்சர் ஏன் அப்படிக் கூறினார் என்பது தெரிந்தது. குஞ்ஞாலி குட்டி முஸ்லீம் லீகைச் சேர்ந்தவர். அதனால் இந்துக்களின் குத்து விளக்கை ஏற்ற மறுக்கிறார்!

ஏசுதாஸ் வருத்தமடைந்து அமைச்சரைப் பார்த்து, ''நீங்கள் குத்து விளக்கு ஏற்ற மாட்டீர்கள் என்றால் நானும் ஏற்றக் கூடாது தான். நான் மெழுகுவர்த்தி அல்லவா ஏற்ற வேண்டும்'' எனக் கேட்டார்.

அப்படியும் அமைச்சர் அசைய வில்லை. கடைசியில் ஏசுதாசே அந்த விளக்கின் எல்லாத் திரிகளையும் ஏற்றி நிறுவனத்தைத் தொடங்கி வைத்தார்.

விழாவில் பேசிய ஏசுதாஸ், ''அமைச்சர் எந்த ஒரு ஜாதிக்கோ, மதத்துக்கோ பிரதிநிதி அல்ல. அவர் எல்லோருக்கும் பொதுவானவர். இந்த அடிப்படையில்தான் அமைச்சர்கள் செயல்பட வேண்டும். இப்படிப் போனால் நாட்டில் எப்படி மத ஒற்றுமை

சேதி கேட்டோ!

# அமைச்சருடன் மோதிய ஏசுதாஸ்!



வளரும்?'' என அமைச்சரை மேடையில் வைத்துக் கொண்டே கேட்டார். பிறகு அமைச்சர் பேசும் போது இதற்கு ஒரு பதிலும் கூறாமலேயே பேசி விட்டுச் சென்று விட்டார்.

கேரளாவில் சமீப காலமாக முஸ்லீம் அமைச்சர்கள் கலந்து கொள்ளும் பொது நிகழ்ச்சிகளில் குத்துவிளக்கு ஏற்றுவதைத் தவிர்த்து வருகிறார்கள். அயோத்தியின் பாதிப்பு இது!

– எஸ். எஸ். மணி

**அடுத்த இதழில்......**

- **புதிய கூட்டணி உருவாகிறது!**
  **– சிறப்புக் கட்டுரை**

உங்கள் செல்வம் பெருக......

உங்கள் செல்வம் பெருக...

# முதலீடு கோரும் முதல்தர நிறுவனங்கள்

## ITC HOTELS LTD

சிகரெட் தயாரிப்பில் ஈடுபட்டிருந்த "இந்திய டுபாக்கோ கம்பெனி" (ITC), பின்னர் ஹோட்டல் தொழிலில் மட்டுமின்றி சமையல் எண்ணெய் போன்ற பல துறைகளிலும் கிளை விட்டிருக்கிறது. தற்போது ITC ஹோட்டல் நிறுவனம், பெங்களூரிலும் ஜெயப்பூரிலும் உள்ள தங்கள் ஹோட்டல்களை விரிவுபடுத்த எண்ணி, பகுதி அளவில் பங்குகளாக மாற்றப்படக் கூடிய கடன் பத்திரங்களை வழங்குகிறது. இதில் பொது மக்களுக்கு 50 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொன்றும் ரூ. 500 பெறுமானமுள்ள கடன் பத்திரங்களில் A பகுதியான ரூ. 180, நான்கு பங்குகளாக ஒதுக்கீடு ஆணையோடு மாற்றப்படும். ஒவ்வொரு பங்குக்கும் பிரீமியம் ரூ. 35 ஆகிறது. (ரூ. 45 X 4 = 180) கடன் பத்திரத்தின் இரண்டாவது B பகுதியான ரூ. 70க்கு பதினெட்டு மாதங்களுக்குப் பிறகு ஒரு பங்கு கிடைக்கும். அதாவது பிரீமியம் ரூ. 60/- ஆகிறது. மூன்றாவது C பகுதியைப் பங்காக மாற்ற முடியாது. இந்த ரூ. 250 க்கு 17% வட்டி உண்டு. கடன் தொகை முறையே 6 வது, 7 வது, 8 வது ஆண்டுகளில் ரூ. 80, ரூ. 80, ரூ. 90 என்ற தவணைகளில் திருப்பித் தரப்படும். ஐந்து நட்சத்திர ஹோட்டல்கள் பலவற்றை நடத்தும் இந்த நிறுவனத்தின் பங்குகளுடைய மதிப்பு மார்க்கெட்டில் உயர்வதற்கான வாய்ப்பு நிச்சயம் உண்டு.

## APPLE INDUSTRIES LTD

லாபத்தில் நடந்து கொண்டிருக்கும் இந்த நிறுவனம் பிரபலமானது. நிதி நிறுவனமாக மட்டுமின்றி, கம்ப்யூட்டர் பயிற்சி, நிர்வாகம் முதலியவற்றிலும் கவனம் செலுத்துகிறது. நிறுவனத்தின் தலைவர் அடுல் கே. நிஷார் நல்ல அனுபவஸ்தர். பங்கு மார்க்கெட்டில் நிறுவனத்துக்கு ஒரு நல்ல கௌரவமான புகழ் உண்டு. தற்போது தன் பணிகளை விரிவாக்கம் செய்யக் கருதி கிரானைட் ஏற்றுமதியில் கிளை பரப்ப இருக்கிறது. நூறு சதம் ஏற்றுமதியையே நோக்கமாகக் கொண்டு இந்தத் துறை இயங்கும். இதற்காக 121 கோடி மூலதனம் கோருகிறது இந்த நிறுவனம். இதில் ஏற்கெனவே பங்குதாரர்களாக உள்ளோருக்கு ஒதுக்கியது போக பொது மக்களுக்கு ரூ. 40 கோடி ஒதுக்கப்படுகிறது. இந்நிறுவனம் வழங்கும் கடன் பத்திரம் ஒவ்வொருன்றும் ரூ. 50 மதிப்பு உடையது. ஒதுக்கப்பட்ட ஆறாவது மாதம் இது ஒரு பங்காக மாற்றப்படும். அதாவது பிரீமியம் ரூ. 40 ஆகிறது. ஆறு மாதங்களுக்குக் கடன் பத்திரமாகவே இருக்குமென்றாலும் இதற்கு வட்டி கிடையாது. இன்று நிறுவனத்தின் பங்குகள் ஒவ்வொன்றும் ரூ. 90 க்கு விலை போகின்றன என்பதை நோக்க நல்ல முதலீடாகவே கருதலாம்.

## SHREE KRISHNA PETRO YARNS

கிருஷ்ணா குரூப் நிறுவனங்களைச் சேர்ந்த, லாபம் சம்பாதித்துக் கொண்டிருக்கிற ஒரு நிறுவனம். பருத்தியிலிருந்தும், செயற்கை இழைகளிலிருந்தும் நூல் தயாரிக்கும் பணியில் ஈடுபட்டுள்ளது. கடந்த மூன்று ஆண்டுகளாக 20 சதம் லாபப் பங்கீடு வழங்கி வந்துள்ள நிறுவனம். தற்போது இவர்கள் தயாரிப்புக்குக் கிராக்கி நிறைய இருப்பதால் விரிவாக்கம் கருதி 82 கோடி முதலீடு கோருகிறது. இதில் 50 கோடி இயந்திரங்கள் நிறுவவே செலவாகும். முதலீட்டை, ஒவ்வொன்றும் ரூ. 130 பெறுமானமுள்ள கடன் பத்திரங்களை வழங்கித் திரட்ட எண்ணுகிறது இந்த நிறுவனம். ரூ. 65 + ரூ.65 என இருபகுதிகளாக உள்ள இந்த டிபன்சர் பத்திரங்களுக்கு வட்டி கிடையாது. ஒதுக்கப்பட்ட உடனேயே டிபன்சரின் முதல் பகுதி (A) ஒரு பங்காக மாற்றப்படும். இதற்கு ஓராண்டு சென்று மற்றொரு பகுதி (B) க்கு இன்னொரு பங்கு கிடைக்கும். அதாவது பத்து ரூபாய் பங்கை ரூ. 55 கூடுதல் விலை கொடுத்துப் பெறுவதாகிறது. ஒரு டிபன்சர் பத்திரத்துக்கு இவ்வாறு ஓராண்டில் இரு பங்குகள் கிடைக்கும். இன்று இந்த நிறுவனத்தின் பங்குகள் மார்க்கெட்டில் ரூ. 100 க்கு விலை போகின்றன என்பதைக் கவனித்தால் நமது முதலீட்டின் மதிப்பு உயர வாய்ப்பு உள்ளதை உணரலாம்.

ஒவ்வொரு கடன் பத்திரத்துடனும் வழங்கப்படும் ஓர் உத்தரவாதம் கூடுதல் கவர்ச்சி. இதனை மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு ரூ. 65 செலுத்தி ஒரு பங்காக மாற்றிக் கொள்ளலாம்.

– வி. கோபாலன்

# ஜகஜ்ஜால கம்ப்யூட்டர்

**நவீன கம்ப்யூட்டர் வசதிப் பெருக்கம் எந்த அளவுக்கு உள்ளது என்பதை 'நேஷனல் ஜியோஃகிராபிக்' இதழ் நிருபர் (அமெரிக்கர்) தெரிவிப்பதைப் பாருங்கள்.**



'பாரீஸில் மாலை மங்கிய நேரம். எனக்கு சற்று பணம் தேவைப்பட்டது. இப்பொழுது வங்கிக்குச் சென்றால் அது மூடியிருக்கும். ஆனால் வங்கியின் முன்னால் தானியங்கி 'டெல்லர்' இயந்திரம் இருக்கும். அதில் எனது, (வாஷிங்டனிலுள்ள எனது வங்கி தந்த எனது அடையாளம் மற்றும் எண் கொண்ட) அட்டையைத் திணித்து 'எனக்கு பிரெஞ்சு ஃபிராங்க் 1500 தேவை' எனத் தெரிவித்தேன். 1500 ஃபிராங்க் என்பது சுமாராக 300 டாலராகும்.

என்னுடைய அட்டையைப் பெற்றுக் கொண்ட அந்த பிரெஞ்சு வங்கியின் கம்ப்யூட்டர் எனது அட்டை அந்த வங்கிக்கு உரியது அல்ல என்பதைக் கண்டுபிடித்ததும், உடனடியாக அதை அருகிலுள்ள பெல்ஜியத்திலுள்ள 'ஐரோப்பிய வங்கிகளின் இணைப்பு' மையத்திற்கு 'ஸிர்ரஸ் கம்ப்யூட்டர் ஸிஸ்டம்' மூலமாக எனது பணத் தேவையைத் தெரிவித்தது. அந்த ஐரோப்பிய இணைப்பு மையம் எனது அட்டையைப் பற்றிய விவரங்கள் அறிந்து இது ஐரோப்பிய அட்டை அல்ல என்பதைக் கண்டுபிடித்தது. உடனே எனது செய்தியை அமெரிக்காவின் டெட்ராய்ட் நகரிலுள்ள 'உலக இணைப்பு மையத்திற்கு' அனுப்பியது.

அச் செய்தியைப் பெற்றுக் கொண்ட உலக மையம் எனது அட்டை வாஷிங்டனிலுள்ள ஒரு வங்கியைச் சார்ந்தது என்பதைத் தெரிந்து, அச் செய்தியை வாஷிங்டனிற்கு அனுப்பியது. அச் செய்தியைப் பெற்ற எனது வங்கி எனது கணக்கைச் சரிபார்த்து என் கணக்கிலிருந்த வரவில் 300 டாலர் மற்றும் சேவைக் கட்டணம் 1.50 டாலர் ஆக 301.50 டாலரைப் பற்று எழுதிக் கொண்டு 'பணம் தரலாம்' என்கிற செய்தியை டெட்ராய்டிற்கு அனுப்பியது. உடனே டெட்ராய்ட் மையம் பெல்ஜியத்திற்குத் தர, பெல்ஜியத்திலிருந்து தகவல் பாரீஸிலுள்ள வங்கிக்குத் தகவல் தர, எனக்கு 1500 ஃபிராங்குகளை அந்தத் தானியங்கி இயந்திரம் தள்ளிவிட நான் அவைகளை எடுத்துக் கொண்டேன்.

இந்தத் தகவல் போக்குவரத்து அனைத்தும் கம்ப்யூட்டர் மூலமாக நடைபெற்றது. இதற்கு ஆன நேரம் எவ்வளவு தெரியுமா? 16 வினாடிகள். ஆம் பதினாறே வினாடிகள்தாம்.

மேலே குறிப்பிட்ட விஷயத்தைப் படிக்க நீங்கள் குறைந்தபட்சம் 45 வினாடிகள் எடுத்துக் கொள்வீர்கள். அதாவது நீங்கள் இதைப் படிக்க எடுத்துக் கொண்ட நேரத்தின் மூன்றிலொரு பகுதி நேரத்திற்குள் கம்ப்யூட்டர் தகவல்களை முடித்துப் பணத்தை அளித்து விட்டது.

•

தகவல் :
**சுப்பிரமணியன் காளியண்ணன்**

நன்றி :
**'நேஷனல் ஜியோஃகிராபிக்'**



# தன்னைத்தான் காக்கின்...

"என்னங்க... டாக்டர்கிட்டே செக்-அப்புக்குப் போகணும்னு நேத்துலேர்ந்து சொல்லிக்கிட்டிருக்கேன்... ஸ்கூட்டரை எடுத்துக்கிட்டு இப்ப எங்கே கிளம்பிட்டீங்க..." கான்ட்ராக்டர் மனைவி காமாட்சி கடுகடுத்தாள்.

"அட கம்மாயிரு... கிளம்பும் போது எதையாவது சொல்லிக்கிட்டு. இன்னிக்கு ஒரு பில்லுக்குப் பணம் வரணும். ஹைவேஸ் ஆபீஸ் வரை போயிட்டு வந்துடறேன்..." என்று சொல்லி விட்டு ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான் மாணிக்கம்.

மாணிக்கம் அந்த வட்டாரத்தில் செல்வாக்குள்ள கான்ட்ராக்டர். நெடுஞ்சாலை ரோடு போடுவதாகட்டும், ஓவர் பிரிட்ஜாகட்டும், எதுவானாலும் அவன் தான் கான்டிராக்டர். டெண்டருக்கு சாமர்த்தியமாக குறைந்த ரேட் கொடுத்து, ஓர்க் ஆர்டரை வாங்குவதில் மிகவும் கெட்டிக்காரன் அவன். அரசியல்வாதியிலிருந்து, ஆபீஸ் ப்யூனில் தொடங்கி எஸ்.ஈ. வரை அவரவர் நிலைக்கேற்ப பணத்தைக் கொடுத்து மிகச் சுலபமாகத் தன் காரியத்தைச் சாதித்துக் கொண்டு விடுவான். போன மாதம் கூட ஒரு தார் ரோட்டுக்கான கான்ட்ராக்டை அவன்தான் எடுத்து முடித்தான். அதற்கான பில் பணத்தை வாங்குவதற்காகத் தான், அந்த ஹைவேஸ் ஆபீசுக்குப் போய்க் கொண்டிருந்தான் மாணிக்கம்.

மாணிக்கத்தின் ஸ்கூட்டர் அந்த ரோட்டில்(!) மேட்டில் ஏறியும் பள்ளத்தில் இறங்கியும் அவனைக் குலுக்கிக் கொண்டிருந்தது. ஒரு பாட்டிலில் பாலை எடுத்துக் கொண்டு வந்திருந்தால், நிச்சயம் வெண்ணெய் திரண்டிருக்கும். அத்தனை குலுக்கலுக்கும் ஒரு முணுமுணுப்புக் கூட இல்லாமல் மாணிக்கம் பொறுமையாக ஸ்கூட்டரை ஓட்டிக் கொண்டிருந்தான். காரணம் இந்தத் தார் ரோடு கூட போன வருடம் அவன்தான் கான்ட்ராக்ட் எடுத்துச் செய்தான்!

"என்ன... இப்படி குண்டும் குழியுமாகவா ரோடு போடுவாங்க... கான்ட்ராக்ட்காரனுக்கு மனசாட்சியே கிடையாதா...?" என்று யாராவது மாணிக்கத்தைக் கேட்டுப் பார்க்கட்டும்.

"ஏன் சார்... ஒரு ஓர்க் ஆர்டரைப் பிடிக்கறதுக்கு முன்னாலேயே இத்தனை சதம்னு தொகுதி எம்.எல்.ஏவுக்குக் கொடுத்து, அப்புறம் உதவிப் பொறியாளர், செயற் பொறியாளர்னு பில்ல பாஸ் பண்ற க்ளார்க் வரை நான் கப்பம் கட்டினா, நான் ரோட்டுல கல்லைப் போட்டு மண்ணைத்தான் மூட முடியும்..." என்று கேள்வி கேட்பவர் வாயையே மூடி விடுவான்

க.ஐப்பிலி அப்பன்

மாணிக்கம்!

அந்த நெடுஞ்சாலை ஆபீஸ் முன்பாக ஸ்கூட்டரை நிறுத்தினான் மாணிக்கம்.

காவிப் பல் தெரியச் சிரித்து, அவனை வரவேற்ற ப்யூன் முருகன் கையில் ஒரு ஐந்தை அழுத்தி விட்டு, எக்ஸிகியூடிவ் என்ஜினீயர் அறைக்குள் நுழைந்தான் மாணிக்கம். அவ்வளவுதான்... அவன் ரோடு வேலையை எவ்வளவு வேகமாக செய்து முடிப்பானோ அதே வேகத்தில் அவன் எதிர்பார்த்த செக்கும் அவனுக்குக் கிடைத்து விட்டது!

ஸ்கூட்டரை வீட்டுத் தாழ்வாரத்தில் நிறுத்தி விட்டு, "காமாட்சி... காமாட்சி..." என்று மனைவியை அழைத்துக் கொண்டே உள்ளே சென்ற மாணிக்கம், அவன் மகள் அழுத கண்ணீரும், சிந்திய மூக்குமாக நிற்பதைப் பார்த்து மலைத்துப் போய் நின்று விட்டான்.

"ஏய்... எதுக்கு அழறே... என்ன ஆச்சு...?" பதற்றத்துடன் மகளை நெருங்கினான்.

"அப்பா... அம்மா ஆஸ்பத்திரியில் இருக்காங்க... யாரோ டவுனிலிருந்து வந்து சொன்னாங்க..." என்றபடி ஒரு கடிதத்தைக் கொடுத்தாள்.

"என்ன ஆச்சு? எந்த ஆஸ்பத்திரி?" என்று கேட்டவாறே அந்தக் கடிதத்தைப் படித்து விட்டு மீண்டும் ஸ்கூட்டரை எடுத்துக் கொண்டு கிளம்பினான்.

ஆஸ்பத்திரியில் காமாட்சி மயக்கமாகப் படுத்திருந்தாள். பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஓர் அம்மாவிடம் பதற்றத்துடன் விசாரித்தான் மாணிக்கம்.

"பஸ்ஸுல இவங்க கூட நானும் வந்தேன். ரோடா அது? எந்தப் பாவிப்பய போட்டானோ... ஒரே குண்டும் குழியுமா... அதுல பஸ் குலுங்கிக் குலுங்கி வந்ததால இவங்க திடீர்னு மயக்கமா எம்மேல சாய்ஞ்சுட்டாங்க. என்னன்னு தெரியலை. டவுன் வந்ததும் மத்த பொம்பளைங்க துணையோட இந்த ஆஸ்பத்திரியில கொண்டாந்து சேர்த்தேன். டாக்டரம்மா வந்து பார்த்துட்டு, இவங்க வயத்திலிருந்த ஆறு மாசக் குழந்தை, பஸ் குலுக்கலால - குறைப் பிரசவமாயிட்டுதுன்னு சொன்னாங்க. எனக்கு என்ன செய்யறதுன்னே தெரியலை. நல்ல வேளையா உங்க வீட்டுக்காரியைத் தெரிஞ்ச ஒரு நர்ஸ் இங்க இருந்ததால, அவங்கதான் உங்ககிட்டே சேதி சொல்ல ஆளனுப்பினாங்க. நீங்க வர்ற வரைக்கும் துணையா இருப்போமேன்னு நானும் இருந்தேன்!" என்றாள் அந்த அம்மாள்.

மாணிக்கம் பேசும் சக்தியற்று மனைவியையே பார்த்துக் கொண்டிருந்தான்!



"பால்காரர் தன் பெண்ணுக்குப் பிள்ளை பார்த்துட்டாராம்..."

"பையன் என்ன பண்றான்?"

"தண்ணி லாரி ஓட்றான்!"

- கே.வி



"என்னதான் பெண் அழகா இருந்தாலும், வைச்ச கண் எடுக்காம பார்க்காதேடா...! வரதட்சணையில் குறைச்சிடப் போறாங்க.....!"

- ஆர். வசந்தகுமார்

"உங்க பையன் அரசியல்ல உங்களை விடப் பெரிய ஆளா வருவான் சார்!"

"எப்படி சொல்றீங்க!"

"உலகிலேயே உயரமான மலை இமய மலை'ன்னு சொன்னா, 'கட் அவுட் உயரம் இருக்குமா'ன்னு கேட்கறானே!"

- பாளை பாலு



# பாப்கார்ன் கனவுகள்

22

வரவேற்பறை டேபிளில் ரூபாய் பதினைந்தாயிரம் இருக்கிறது. மாப்பிள்ளை தாராளமாய் எடுத்துக் கொள்ளலாம். ஓர் அவசரத்துக்கு இல்லாத பணம் அவருக்கு எதற்கு? காலை பாங்க் திறந்ததும் முதல் வாடிக்கையாளராக மாமனார்தான் நுழைந்தார். மூன்று வருடம் போட்டிருந்த பணத்தை மானேஜர் கெஞ்சக் கெஞ்ச உடைத்து எடுத்து வந்து விட்டார்.

உள்ளறையில் இருட்டடித்த லக்ஷ்மி நாராயணன் காதுகளில் விழட்டும் என்று கொஞ்சம் சப்தமாகவே பேசுகிறார். சமயத்துக்கு உதவ முடிகிறதில் அவருக்கு எவ்வளவோ சந்தோஷம். ஆனால் ஒரு விஷயம். இது அவர் வாழ்நாளில் மிகவும் கஷ்டப்பட்டுச் சேர்த்த பணம். இனி வருகிற வருடங்களுக்கு அவர் இதைத்தான் நம்பியிருக்கிறார். கையில் நான்கு காசு இருந்தால் தான் மதிப்பு என்கிற காலமாய் இருக்கிறது. எனவே, பணத்தை எப்படித் திருப்பித் தர மாப்பிள்ளை உத்தேசித்திருக்கிறார் என்று தெரிய வேண்டும்.

அவர் தமிழர். சுயமரியாதைக்காரர். கண்டிப்பாய் திருப்பித் தருகிற எண்ணம் இருக்கும். அவருடைய ஜில்பாஸ் வேலைகளைக் குறைத்துக் கொண்டால் அது மிகவும் எளிதும் கூட. ஐந்து மணி ஆபீஸ் விட்டதும் வீட்டுக்கு வந்து விட வேண்டும் என்று கூட முடிவெடுக்கலாம். விடிய விடிய தெருக்கூத்து சம்சாரிக்கு ஆகுமா? கொஞ்சம் யோசனை வேண்டாமா? இது மனிதனை மனிதன் சாப்பிடுகிற காலமில்லையா? இதில் ஒருத்தன் உஷாராய் இருக்க வேண்டாமா? பறப்பேன், பறப்பேன்னு கையசைச்சாப் போறுமா? முயற்சிக்கு முடிவு வேண்டாமா?

மாப்பிள்ளை நன்றாக இருக்க வேண்டும் என்பது தவிர, ஒரு மாமனாரால் வேறு விதம் நினைக்க முடியுமா? வயதிலும் அவர் ஒரு அப்பா மாதிரியில்லையா? இரண்டாம் குழந்தையும் வந்து விட்டது. இனிமேல் நிலைமைகள் திருந்த வேண்டும். உண்மையில் பணம் திருப்பி வருவது அவ்வளவு முக்கியமில்லை. அவர் வார்த்தைகளுக்கு அர்த்தம் பற்றி மாப்பிள்ளை யோசித்துக் கொஞ்சம் தன்னை மாற்றிக் கொண்டால் போதும். சீக்கிரம். நேரமாகி விட்டது. மாப்பிள்ளை புறப்படட்டும். பணம் பத்திரம். அதில் ஒரு கண் எப்போதும் இருக்கட்டும்.

அரக்கு வைத்துத் திரும்பி வந்த நகைகளில் அன்றைக்கு இரவு விஜயலக்ஷ்மி விசேஷ அலங்காரம். அனைத்துக்கும் மேலாக வழக்கம் போல் ஒரு புன்னகையை அணிந்து விஜயலக்ஷ்மி நமஸ்கரிக்கிறாள். லக்ஷ்மிநாராயணன் உடல் கூசி விடுகிறான். இத்தனை அழகையல்லவா அவன் இவ்வளவு நாட்கள் அடகுவைத்து விட்டான்? சிரித்த முகத்தில் விஜயலக்ஷ்மி இல்லையென்றால் அவன் வருடக்கணக்கில் போராடியிருக்க முடியுமா? மன நெகிழ்ச்சியில் மனைவியின் விரல்களை லக்ஷ்மிநாராயணன் பற்றிக் கொள்கிறான்.

விஜயலக்ஷ்மி டீச்சர் தபாலில் பி.எட். படிக்கிறாள். யாரும் சொல்லாமலே ஐந்தாம் வகுப்புப் பையன்களுடன் சமமாய் பஸ் பிடித்துப் பெரம்பூர் பள்ளிக்கூடத்தில் ஹிந்திப் பரீட்சைகள் எழுதுகிறாள். வில்லிவாக்கத்தில் நிறைய பேருக்கு அவனை இப்போது விஜயலக்ஷ்மி டீச்சரின் கணவன் என்ற முறையில்தான் தெரிகிறது. பற்றிய மனைவியின் விரல்களுக்கு லக்ஷ்மிநாராயணன் அழுத்தம் கொடுக்கிறான். நிச்சயம் பதிலுக்கு அவனும் ஏதேனும் செய்து காட்டுவான்.

பீச் ஸ்டேஷன் அலுவலகம். சென்னையில் ரயில்களும், பஸ்களும் ஓடுகிற பகுதி கதவடைப்பு. எதிரே பர்மா பஜார் ஷட்டர்கள் இறங்கியிருக்கின்றன. போக்குவரத்து அதிகம் இல்லாத தெருவில் அவுட்டோர் வேன்கள் நிற்கின்றன. சுரங்கப் பாதையின் அந்தப் பக்கம் கதாநாயகி இறங்குகிறாள். அவளைப் பார்த்துக் கொண்டே நாயகன் எதிர்ப்பக்கம் இறங்கியதில், பார்வை கலந்து, மோத இருந்து, இருவரும் சுதாரித்து நிற்கிறார்கள்.

தமிழகத்து முன்னணி நட்சத்திரங்கள் வந்திருக்கிறார்கள். அவர்கள் வந்து இறங்

ம.வே.சிவகுமார்

கிய காரை ஒரு கும்பல் வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கிறது. வங்கியின் வாடிக்கையாளர்கள் வாசலிலேயே நின்று விடுகிறார்கள். அலுவலகத்தில் விஷயம் பரவி, நாற்காலிகள் காலியாகிறதை எதுவும் செய்ய முடியாமல் அக்கவுண்டண்ட் பார்த்துக் கொண்டிருக்கிறார்.

''நீங்க வரல்லியா?''

அறை வாசலில் மானேஜர் கூப்பிடுகிறார்.

''இதோ...''

அவசரமாய் அக்கவுண்டண்ட் பின்னால் ஓடுகிறார். அத்தனை பெரிய அலுவலகத்தில் யாருமே இல்லை. கண்ணாடிக் கதவில் காவலுக்கு கூர்க்கா நிற்கிறான். கேஷ் டிபார்ட்மெண்டில் டேபிள் ஃபேன் திரும்புகிறது. எதிரே அசையாமல் லக்ஷ்மி நாராயணன் உட்கார்ந்திருக்கிறான். அவன் வாழ்க்கை ஏன் இப்படி ஆகியிருக்கிறது? வெளியே ரிப்ளெக்டர்கள் மின்னுகின்றன. நடுவே கண்ணாடியின் வெனீஷியன் திரை இடைவெளியில் வெளியே கதாநாயகன் டச்சப் செய்து கொள்கிறான். பார்ப்பதற்குக் கூட்டம் அலையடித்து முண்டுகிறது. எங்கிருந்தோ போலீஸ் இறங்கி கைத்தடியில் டபாய்த்ததில் கூட்டம் தொலைவில் ஓடி ஊளையிடுகிறது. இன்ஸ்பெக்டர் பின்பக்கம் நடந்து வந்து காலரில் இருவரைப் பிடித்து போலீஸ் ஜீப்பில் உட்கார வைத்ததும் கூட்டம் அமைதியாகி விடுகிறது.

''லக்ஷ்மி...''

கேஷ் டிப்பார்ட்மெண்டில் மின்விசிறி திரும்புகிறது. எதிரே லக்ஷ்மிநாராயணன் அசைவில்லாமல் உட்கார்ந்திருக்கிறான். கவுண்டருக்கு வெளியே அப்பா திரும்பவும் குரல் கொடுக்கிறார். லக்ஷ்மிநாராயணன் கவனம் கலைந்து, கவுண்டரைச் சுற்றிக் கொண்டு வருகிறான். நவகோடி அம்மாளும், அவளுடைய நலமடைந்து விட்ட



● சீனாவில்
மாலை ஐந்து
மணியளவில் சங்கு
ஊதப்படுகிறது.
எதற்காக?
பெண்கள் கருத்தடை
மாத்திரை சாப்பிட
வேண்டும்
என்பதற்காக!
– கௌ. ராஜேந்திரன்



கணவரும் நன்றிக்கடன் செலுத்த வாடகை வண்டியில் பல க்ஷேத்திரங்கள் நடுவே மதுரையும் வந்திருந்தார்கள். நடந்த விஷயங்களை அப்பா நவகோடி அம்மாள் மூலம் கேள்விப்பட்டார். காலையில் மாம னாரை எதிர்வீட்டில் பார்த்தார்.

சிறிய வயதிலேயே லக்ஷ்மிநாராயணன் எவ்வளவோ திறமைகளைக் கொண்டவன். நடுத்தரக் குடும்பத்தில் ஒவ்வொன்றுக்கும் காசைப் பார்த்து எதையுமே வளர்த்துக் கொள்ள முடியாமல் போய் விட்டது. அவன் பொறுப்பானவன்தான். ஆனால் அவன் ஆசை பெரியது. அவனுடைய தவிப்பு, அவன் மனைவிக்குப் புரிகிறது. அவன் வாய் திறந்து எதுவும் சொல்லாத வரைக்கும் பெரியவர்கள் நாம் எதிலும் தலையிடுதல் சரியாகாது. முதலில் இந்த எதிர் வீட்டைக் காலி செய்து கே. கே. நகரில் அவரது அண்ணனுக்குத் துணையாகப் பக்கத்திலேயே ஃப்ளாட் பார்க்கலாம். கண்டிப்புக் கூடிய குரலில் சொல்லி விட்டு பெத்த கடனுக்கு மாமனார் கடனை அப்பா அடைத்து விட்டார். இன்னும் மற்ற கடன் விவரங்களையும் அவன் சொல்லி விட்டால் அவற்றையும் கொடுத்து விடலாம்.

''அப்பா...''

வங்கியின் வாடிக்கையாளர் பகுதியில் லக்ஷ்மிநாராயணன் குரல் உடைகிறான்.

''ச்சீ!''

ஆறுதலாய்க் கண்டித்து, அப்பா தொடர்கிறார். அவன் இப்படி வருத்தப் படக் கூடாதேயென்றுதான் அவர் உடனடி யாய்ச் சென்னை வந்தது. எதற்கும் அழ வேண்டாம். இனிமேல் பொறுப்புடன் நடந்து கொண்டால் போதும். காலை உணவு அவன் வீட்டில் முடித்தார். அவன் மனைவி, குழந்தைகளைப் பார்த்தாகி விட்டது. மதியம் திருவள்ளுவரில் ரிசர்வ் செய்திருக்கிறார். போகிற வழியில் அவனைப் பார்க்கலாமே என்று வந்தார். சரி. தைரியமாய் இரு. குழந்தை மாதிரி அழாதே. விவரமாய் லெட்டர் போடு. பணம் அனுப்பறேன். நான் வர்றேன். யு ஆர் நோ மோர் எ பேச்சிலர் பாய். அது மட்டும் ஞாபகத்தில் எப்போதும் இருக்கட்டும்.

கண்ணாடிக் கதவு திறந்து ஒவ் வொருத்தராய் உள்ளே வருகிறார்கள். பல இடங்களில் நகர்ந்து நின்று மானேஜரும், அக்கவுண்டண்டும் இதைச் சாதித்திருக் கிறார்கள். வங்கியின் நிர்வாகிகள் சன்ன மாய்ச் செயல்படுவதில் தேர்ந்து விட்டிருக் கிறார்கள். கேஷ் டிப்பார்ட்மெண்டில் வெளியே ஷூட்டிங் பார்க்க வராமல் காவ லாய் அமர்ந்திருந்தது லக்ஷ்மிநாராயணன் எனத் தெரிந்ததும் அவன் நண்பர்கள் அலறு கிறார்கள்.

''அடப்பாவி. நீ ஷூட்டிங் பார்க்கப் போகலே?''

கேள்வியை அலட்சியம் செய்து லக்ஷ்மி நாராயணன் பதிலுக்கு ஒரு கேள்வி வைக் கிறான்.

''அதை விடு. ஆபீசர் பரீட்சைக்கு இன்னும் எவ்வளவு நாள் இருக்கு?''

மழைக் காலத்தில் தவளைக் குரல் போல் கொடகொடவென்று சப்தம் எங் கிருந்து வருகிறதென்று வில்லிவாக்கம் மாமனாருக்குத் தெரியவில்லை. மாடிக்கு உயர்ந்து விட்ட அரளிச் செடியில் பூப்பறிக்க எம்பும் போது கண்களில் எதிர்வீட்டு அதி சயம் படுகிறது. மொட்டை மாடியில் அவரின் பிறந்த நாள் பரிசான ஆபீசர் பரீட் சைப் புத்தகத்தை வைத்துக் கொண்டு கொட கொடவென்று வாய் விட்டுச் சப்தம் போட் டுப் படித்தபடி குறுக்கேயும், நெடுக்கேயும் நடந்து மாப்பிள்ளை லக்ஷ்மிநாராயணன் பரீட்சைக்குப் படிக்கும் காட்சி. பூக்குடலை கவிழ்வது தெரியாமல் எதிர் வீட்டில் மாம னார் பார்க்கிறார். இடுப்பில் குழந்தையுடன் விஜயலக்ஷ்மி மொட்டை மாடிக்கு காப்பி எடுத்து வருகிறாள்.

''பேங்கிங் என்பது... பேங்கிங் என்பது... செக்ஷன் 49 பேங்கிங் ரெகு லேஷன் ஆக்ட்படி பேங்கிங் என்பது...''

''அய்யய்யே. இப்பப் போய் அப்பா படிக்கிறார்...''

விஜயலக்ஷ்மியின் கூடவே வந்த மூத்த மகன் குதூகலிக்கிறான்.

''அடிபடுவே. கண்ணுக்குத் தெரியாம ஓடிப் போயிடு.''

லக்ஷ்மிநாராயணன் மூத்த மகனை விரட்டி விட்டு காப்பியைக் குடித்தபடி மேலே படிக்கிறான்.

''பேங்கிங் என்பது... பேங்கிங் என்பது... செக்ஷன் 49 பேங்கிங் ரெகு லேஷன் ஆக்ட்படி...''

இந்த முறை லக்ஷ்மிநாராயணன் விடு முறையில் போகிற போது யாரும் எதுவும் சொல்லுவதில்லை. விஜயலக்ஷ்மி மத்தி

யானம் குடிப்பதற்கு ஃப்ளாஸ்கில் டீ போட்டு வைக்கிறாள். பள்ளிக்கூடத்துக்கு லேட்டாகி விட்டது. எதிர் வீட்டில் மாமனார் இருப்பது குழந்தையை விட்டுப் போக சௌகர்யமாய் இருக்கிறது. இரண்டு வாய் அள்ளிப் போட்டு, மூத்தவனை இழுத்துக் கொண்டு கிளம்புகிறாள். லக்ஷ்மிநாராயணன் படித்துக் கொண்டிருக்கிறான்.

''பேங்கிங் என்பது... பேங்கிங் என்பது... செக்ஷன் 49 பேங்கிங் ரெகுலேஷன் ஆக்ட்படி...''

**மா**லையில் விஜயலக்ஷ்மி வீடு திரும்பும் போது வாசல் கதவை விரியத் திறந்து வைத்து உள்ளறையில் மார்பில் புத்தகம் விரித்து லக்ஷ்மிநாராயணன் அசந்து தூங்கிக் கொண்டிருக்கிறான். சைக்கிளில் பால் வந்ததும் விஜயலக்ஷ்மி அவனை எழுப்பி விடுகிறாள். கொல்லைப் புறக் கிணற்றில் புத்துணர்ச்சி பெற்று லக்ஷ்மிநாராயணன் மீண்டும் படிக்கத் தொடங்குகிறான்.

''பேங்கிங் என்பது... பேங்கிங் என்பது... செக்ஷன் 49 பேங்கிங் ரெகுலேஷன் ஆக்ட்படி...''

''நான் ஒண்ணு கேக்கறேன். தப்பா எடுத்துக்க மாட்டேளே?''

இரவு கண்விழிக்க மீண்டும் பிளாஸ்குடன் வந்து விஜயலக்ஷ்மி கேட்கிறாள்.

''என்ன?''

''அடிக்கப்படாது.''

''சொல்லு.''

''இவ்வளோ தடவை படிக்கிறேளே. இன்னும் உங்களுக்கு மனப்பாடம் ஆகல்வியான்னு...''

மொட்டை மாடி விளக்கு வெளிச்சத்தில் விஜயலக்ஷ்மியை, லக்ஷ்மிநாராயணன் துரத்துகிறான். தொடர்ந்து ஓடியதில் இருவரும் மூச்சிரைத்து நிற்கிறார்கள்.

''சரி, கிளம்பு. நான் படிக்கணும்.''

விஜயலக்ஷ்மி சிரித்துக் கொண்டே படியிறங்கிப் போகிறாள். லக்ஷ்மிநாராயணன் தீவிர முகத்தில் மீண்டும் படிக்கத் துவங்குகிறான்.

**ப**ரீட்சை ஹாலில் இரும்பு வாளியில் பித்தளை தம்ளரில் தண்ணீர் வருகிறது. முதல் அரை மணி நேரம் முடிந்ததற்கான அறிவிப்பு மணி ஒலிக்கிறது. நாக்கைத் துருத்திக் கொண்டு லக்ஷ்மிநாராயணன் மும்முரமாய் பரீட்சை எழுதுகிறான். ஜன்னலுக்கு வெளியே ஒலிக்கிற பாடலில் அவன் கவனம் கலைகிறது.

''வாலிபத்தில் மன்னவன்... ஏ ஹேய் ரசிகர்களின் மன்மதன்... ராத்திரியில் இந்திரன்... ஏஹேய்.....''

(தொடரும்)

# ஜ்யோத்ஸ்னா

மடியில் புரண்டவன் முகம் திருப்பி, அவள் வயிற்றில் மிருதுவாய் முத்தமிட்டான்.

நந்தினிக்குச் சிலிர்த்தது.

அவன் தலைமுடியில் விரல்களை அலைய விட்டாள்.

''நந்து... நான் இப்ப ரொம்ப சந்தோஷமா இருக்கேன் தெரியுமா...!''

சூர்யா கூவினான்.

நந்தினி பேசாமலிருந்தாள்.

''ஹேய்... என்னம்மா... நான் பாட்டுக்குப் பேசிட்டு இருக்கேன்... நீ ஒண்ணுமே சொல்லாம இருக்கே...!''

அவன் விரல்களைப் பிடித்துக் கொண்டாள்.

''என்னப்பா சொல்லணும்....!''

''ம்... அப்படிக் கேளு... இங்க பார் நந்து... எனக்குப் பெண் குழந்தைதான் வேணும்... என்ன பேர் வைக்கலாம் சொல்லு...!''

நந்தினி யோசித்தாள்.

இனி தவிர்க்க முடியாது.

சொல்லித்தான் ஆக வேண்டும்.

''நான் ஒண்ணு சொன்னா கோச்சுக்க மாட்டியேப்பா...?''

''சொல்... சொல்... காதல் ரோஜாவே...!''

சூர்யா நீளமாய்ப் பாடினான்.

''இப்ப இது வேண்டாமே...!''

சூர்யா பளிச்சென எழுந்தான்.

அவன் வேகம் கண்டு தயங்கினாள்.

''எது வேண்டாம்ஙறே...!''

''இந்தக் குழந்தை.''

சூர்யாவின் முகம் மாறி விட்டது.

''ஏன் நந்து?''

''ப்ளீஸ்பா... நான் சொல்றதைப் புரிஞ்சுக்கோங்க... இப்ப வேண்டாம்... கொஞ்ச நாள் தள்ளிப் போடுவோம்...!''

''அதான்... ஏன்?''

''சொன்னா கோபப்படக் கூடாது...!''

''சட்னு சொல்லு நந்து...!''

சூர்யாவின் குரல் உயர்ந்தது.

சூர்யாவுக்கு அபூர்வமாய்த்தான் கோபம் வரும்.

''இந்த வருஷம் எனக்கு ப்ரமோஷன் ட்யூ.. இது இருந்தா கொஞ்சம் சிக்கல்...!''

தயங்கிச் சொன்னாள்.

''ச்சே... இவ்வளவு தானே... நான் என்னவோன்னு பயந்துட்டேன்மா...!''

''அப்ப சரியா...?''

''இல்லே நந்து... இது ஒண்ணும் பெரிய சிக்கலில்லை... நீதானே சீனியர்... பதவி உயர்வு கட்டாயம் கொடுத்துத்தான் ஆகணும்... இதெல்லாம் ஒரு பெரிய பிரச்னை இல்லே...!''

''இல்லைப்பா... உங்களுக்குப் புரியலை... உங்கள மாதிரி அரசாங்க உத்யோகமில்லே.. சீனியாரிட்டிக்கு மதிப்பு கொடுக்க... அது தனியார் நிறுவனம். அதுவும் அட்வர்டைசிங் கம்பெனி... எக்ஸிக்யூடிவ் பதவி.. பிரெக்னென்ட்னா நிறைய லீவு போடணும்... ஆரம்பத்துல நிரம்பக் கஷ்டம்... அத யோசிச்சு நிறுத்திடுவாங்க...!''

சூர்யா யோசித்தான்.

''நான் எவ்ளோ ஆசையாயிருந்தேன்... முதல் குழந்தைதானே... அப்புறம் பிரமோஷனைப் பாத்துக்கறது...!''

''இல்லப்பா முடியாது... இப்ப கிடைக்கலேன்னா அப்புறம் கிடையாது... இது நல்ல சந்தர்ப்பம்... ஜஸ்ட் ரெண்டு வருஷம் டயம் கொடுங்க... சந்தோஷமாப் பெத்துக்கலாம்.. நமக்கென்ன வயசா ஆய்டுச்சு...!''

''இதுதான் உன் விருப்பம்னா சரி... இத என்ன பண்றது...?''

''டாக்டரே நேத்துத்தான் கன்பார்ஃம் பண்ணினாங்க... வேண்டாம்னா டாக்டரே பாத்துக்குவாங்க...!''

''யூ மீன்...?''

''ஆமாம்... ஆரம்ப காலம்தானே... மிகச் சுலபம்...!''

''பாவம் இல்லையா நந்து... நம்ம குழந்தையை நாமே சாகடிக்கிறது... இத முன்னாலேயே என்கிட்ட சொல்லியிருந்தா இது நடக்காம தடுத்திருக்கலாமில்லே...''

''ச்சீ... போப்பா...''

''இப்ப சொல்லு... அம்மாவுக்குத் தெரிஞ்சா ரொம்ப வருத்தப்படுவாங்க நந்து...!''

''சொன்னாத்தானே...!''

''சரி எப்ப டாக்டர் வீட்டுக்குப் போறது...!''

''சாயங்காலம்... நீங்களும் வர்

மதுமிதா

றீங்க...!''

சூர்யா தலையசைத்தான்.

**எ**திரில் இருந்த பெண் இவளைப் பார்த் ததும் முகத்தைத் திருப்பிக் கொண்டது.

நந்தினிக்கு ஆச்சர்யமாயிருந்தது.

சூர்யாவின் காதில் கிசுகிசுத்தாள்.

''அங்க பாருங்க... என்ன பதினெட்டு வயசு இருக்குமா... இதுவே ஒரு குழந்தை மாதிரி இருக்கு... இதுக்கு ஒரு குழந் தையா...?''

''ஆமாம்... எல்லாரும் உன்னை மாதிரி இருப்பாங்களா...!''

நந்தினி மௌனமானாள்.



அப்போதுதான் கயல்விழி உள்ளே நுழைந்தாள்.

இவளைப் பார்த்துச் சிரித்தாள்.

உள்ளே போனாள்.

''யாரு தெரியுதா சூர்யா...?''

''தெரியலையே...!''

''முன்னாடி குடி இருந்தோமே அந்த வீட்டுக்குப் பக்கத்து வீடு... அந்த வீட்டுப் பாட்டியோட பேத்தி... இங்கே ஸ்டாப் நர்ஸா இருக்கு...!''

சூர்யா சுற்றுமுற்றும் பார்த்தான்.

கிளினிக்கில் கூட்டம் சேர்ந்திருந்தது.

''டாக்டர் வர லேட்டாகும் போலிருக்கு... நான் கொஞ்ச நேரம் வெளில நிக்குறேன்...!''

''ஏய்... சிகரெட் பிடிக்கத்தானே...!'' ரகசிய குரலில் கேட்டாள்.

''ஒண்ணே... ஒண்ணு...!''

''சரி... சீக்கிரம் வாங்க... நீங்க இல்லாம டாக்டரைப் பார்க்கக் கூடாது...!''

சூர்யா எழுந்தான்.

கயல்விழி இப்போது டிரஸ் மாற்றியிருந்தாள்.

''எத்தனாம் நம்பர் டோக்கன் நந்து?''

''பதினெட்டு...!''

''கொஞ்சம் லேட்டாகும்...!''

''பரவாயில்லே... டாக்டர் வந்துடுவாங்களா...?''

''பக்கத்து வீடுதானே... வந்துடுவாங்க...!''

''ஏன் கயல்... ஒரு ஃபேன் போடக் கூடாது... இப்படி எரியுதே...!''

''உள்ளே வாங்க... எங்க ரூம் இருக்கு... அவரு எங்கே?''

''வெளில போய்ருக்கார்...!''

எழுந்து கயல்விழியுடன் போனாள்.

அவள் அறை சின்னதாக இருந்தது.

கயல்விழி மின்விசிறியைச் சுழல விட்டாள்.

''நந்து... உனக்கு எதிர்ல ஒரு பெண் - ஜ்யோத்ஸனா - உக்கார்ந்து இருந்ததே... பார்த்தியா...!''

''ஓ... அந்த சின்னப் பெண்... பார்த்தேன்... இத்தனை சின்ன வயசிலே குழந்தை பெத்துக்க வந்துருக்கே.. பதினேழு வயசிலே கல்யாணம் பண்ணி அடுத்த வருஷம் குழந்தை பெத்து, முப்பது வயசிலே கிழவியாய்டும்...!''

கயல்விழி கண்சிமிட்டினாள்.

''என்ன கயல்...?''

''இது வேற விவகாரம்... அது கல்யாணம் ஆன பெண்ணில்லே...!''

''அடிப்பாவி... அப்புறம்...!''

''அது ஒரு கதை... ஜ்யோத்ஸனாவோட அம்மா ஒரு வீட்ல வேலை பாக்குது... இது அந்த வீட்டுக்கு அடிக்கடி போயிருக்கு... அந்த வீட்டுப் பையனோட பழக்கமாய்டுச்சு... பாவம் சின்னப் பொண்ணு.. அவனுக்குச் சந்தோஷம்... இதுக்குக் கஷ்டம்...!''

''அடக் கஷ்டமே... கலைச்சி - வேண்டியதுதானே...''

''டாக்டர் அம்மாவே இதான் கேட்டாங்க... அது பிடிவாதமா மறுத்திடுச்சு... ஒரு உயிரைக் கொல்லக் கூடாதுன்னு சொல்லிடுச்சு...!''

''வெளில தெரிஞ்சா அசிங்கமாய்டுமே...!''

''அதையும் சொன்னோம். அசிங்கம், அவமானத்தோட ஒரு உயிர் பெரிசு... நான் செஞ்ச தப்புக்கு இது தண்டிக்கப்படக் கூடாதுன்னு சொல்லுது...!''

நந்தினி உறைந்து போனாள்.

கயல்விழி இவள் தோள்களைத் தட்டினாள்.

''சரி... டாக்டர் வந்துட்டாங்க.... நீ போய் உக்காரு....!''

நந்தினி உட்காரவில்லை.

வெளியே வந்தாள்.

சூர்யா நின்று கொண்டிருந்தான்.

''வீட்டுக்குப் போலாமா...?''

''ஏன்... டாக்டர்...!''

''பாக்கலை... நம்ப பெண்ணுக்குப் பேர் வச்சிட்டேன்... ஜ்யோத்ஸனா... எப்படி...?''

சூர்யா சந்தோஷமாய் அவள் விரல்களைப் பற்றிப் பின்னிக் கொண்டான்.

---



"சே! இந்த சமூகத்தைப் புரிஞ்சுக்கவே முடியலைப்பா!"

"ஏண்ணே?"

"நான் சோடா பாட்டில் விக்கறச்சே கண்டுக்காதவனெல்லாம் சோடா பாட்டில் வீச ஆரம்பிச்சதும் 'விஷ்' பண்றானே!"

- எஸ். ரமேஷ்



# மாயத் திரை

**5**

"டாக்டர்! ப்ளீஸ்! சொல்லுங்க! சூர்யாவுக்கு என்ன? உண்மையைச் சொல்லுங்க!" என்றாள் திலகா. அவள் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. உதடுகள் துடித்தன. அவர்கள் எழுந்து நடந்தார்கள்.

"சொல்றோம்மா! இன்னும் சரியா நிர்மாணிக்க முடியலை. ஆனா உடனே அட்மிட் பண்ணிடறது நல்லது!" என்றார் டாக்டர் அமானுல்லா.

"எ... து... க் ... கு டாக்டர்?"

"கொஞ்சம் பொறுமையா இருங்க. ப்ளீஸ், மிஸஸ் சூர்யா! நாங்க கொஞ்சம் பேசணும்."

அவள் தயங்கியபடி விலகிக் கொண்டாள். நடந்து சூர்யாவின் அறைக்குள் சென்று செயற்கைத் தூக்கத்தில் மரம் போல் படுத்திருந்த தன் அன்புக் கணவனைப் பார்த்தாள். சூர்யா! வேகத்தின் உருவமே! என்ன ஆச்சு உனக்கு? அவள் அருகில் அமர்ந்து விசித்து விசித்து அழ ஆரம்பித்தாள்.

சூர்யா சிலை போல் படுத்துக் கிடந்தான்.

"டாக்டர்! ஸிம்ப்டம்ஸ் எல்லாம் பார்த்தா நியூரோடிராபிக் மாதிரி இருக்கு... பட்...." டாக்டர் விஜயன் தயங்கினார்.

"இட் மஸ்ட் பி ஹைட்ரோபோபியா!" என்றார் அமானுல்லா.

விஜயன் அவரையே பார்த்தார். அமானுல்லாவின் முகத்தில் ஆழ்ந்த சிந்தனை தெரிந்தது. சிவப்பான நெற்றியில் சுருக்கங்கள். யோசிக்கிறார். பிறகு மெதுவான குரலில், "ப்ரோட்ராமல் பீரியட் முடிஞ்சு போச்சுன்னு நினைக்கிறேன். தி ஆன்ஸெட் ஹாஸ் பிகன்...." என்றார்.

கிருஷ்ணா டாவின்ஸி

"டாக்டர்! ராபிஸ்னு முடிவே பண்ணிட்டீங்களா?"

"ஸிம்ப்டம்ஸ் அப்படித்தான் இருக்கு. அது இல்லைன்னா நல்லதுதான். ரொம்ப அமுக்கமான வியாதி இது. இன்குபேஷன் டைம் ஜாஸ்தி. வெளியவே தெரியாது... இது ராபிஸா இருந்ததுன்னா... இன்ஷா அல்லா!"

"தலைவலி, இன்ஸோம்னியா, உடம்பு வலி, ரெஸ்ட்லஸ்னஸ், ஆத்திரம், வாயில வழியற எச்சில், ஸ்பாஸம்ஸ் இதையெல்லாம் பார்த்தா..."

"தண்ணி வேண்டாம்கிறார். ஹி இஸ் அஃப்ரைட் ஆஃப் ஸ்வாலோயிங். எவ்வளவு கோபம் வருது பாருங்க..."



''என்ன பண்ணலாம் டாக்டர்?''

''தர் இஸ் நோ மெடிஸன் ஃபார் ராபிஸ். முதல்ல, ஸ்டேஜ் என்னன்னு தெரியணும்.''

''நேரம் ஆக ஆக ரிஃப்ளெக்ஸ் அதிகமாயிடும் டாக்டர். குரலைக் கேட்டீங்களா?''

''ஃப்யூரியஸ். ஒரு நிமிஷம்! வாங்க, மிஸஸ் சூர்யா!'' என்று நடந்து சென்றவளை அழைத்தார்.

நிலகா மறுபடி வந்து அமர்ந்தாள்.

''மிஸஸ் சூர்யா! பயப்படாதீங்க! நிதானமாக நான் கேக்கற கேள்விக்குப் பதில் சொல்லுங்க!''

''என்ன டாக்டர்?'' என்றாள் பதற்றமாக.

''உங்க வீட்ல நாய் வளர்க்கறீங்களா?''

''இல்லை டாக்டர்! அவருக்கு நாய்னா அலர்ஜி. கிட்டேயே சேர்க்க மாட்டார்!''

''சமீபத்துல அவரை எப்பவாவது நாய் கடிச்சதா?''

''நாயா? இல்லையே? டாக்டர்... எனக்கு... பயமா இருக்கு... என்ன...? சூர்யாவுக்கு என்ன?''

''ப்ளீஸ். யோசிக்கச் சொல்லுங்க! ஷூட்டிங்ல ஏதாவது நாய் கடிச்சதாச் சொல்லியிருக்காரா?''

''இல்லையே? கடவுளே! சுந்தரம்! சுந்தரம்!'' என்று பி.ஏ.வைக் கூப்பிட்டாள்.

''இருங்கம்மா. அவரைக் கூப்பிடாதீங்க!''



''என்னம்மா?'' என்று அழைத்தபடியே வந்து விட்டான் சுந்தரம்.

''சுந்தரம்! சூர்யாவை எப்பவாவது நாய் கடிச்சதா? உன்கிட்டே சொன்னாரா?'' என்றாள் தடுமாறிய குரலில்.

அவன் புரியாமல், ''இல்லையேம்மா. ஏன்? என்ன விஷயம்?''

''ஒண்ணுமில்லை. நீங்க போங்க!'' என்றார் டாக்டர் விஜயன். அவன் அங்கிருந்து அகன்றான்.

டாக்டர் அமானுல்லா மறுபடி நிதானமாக, ''கொஞ்சம் யோசிச்சுச் சொல்லுங்கம்மா. அது தெரிஞ்சா மருத்துவத்துக்கு உதவியா இருக்கும்... அப்பத்தான் எதையும் தீர்மானிக்க முடியும்.''

''இல்லை டாக்டர்! நிச்சயமா அது மாதிரி எதுவும் நடக்கலை.''

''டாக்டர்! டைம் இஸ் ரன்னிங் அவுட்.''

''மிஸஸ் சூர்யா! அவரை உடனே ஆஸ்பத்திரியில அட்மிட் பண்ணியாகணும். வேற வழியில்லை. தயவுசெஞ்சு உணர்ச்சிவசப்படாதீங்க. உங்க கணவர் ஒரு பெரிய ஸ்டார். வதந்திகள் வேகமாப் பரவும். ஏதாவது கலவரம் நடக்கும். விஜயன், நீங்க ஆம்புலன்ஸ் வரவழைங்க. லெட் மி டாக் டு தி போலீஸ் கமிஷனர். யாருக்கும் எதுவும் தெரிய வேண்டாம்...''

''டாக்டர்! சொல்லுங்க! சூர்யாவுக்கு என்ன?'' என்றாள் திலகா. அவள் பார்வையில் அச்சம் படர்ந்திருந்தது.

''ஒண்ணுமில்லைம்மா. நிறைய டெஸ்ட் பண்ணணும். நியூரோ டெஸ்டெல்லாம் இங்கே செய்ய முடியாது. பயப்படாதீங்க. நாங்க பாத்துக்கறோம்!'' என்றவர் டெலிஃபோனைச் சுழற்றி போலீஸ் கமிஷனரை உடனே சந்திக்க விரும்புவதாகத் தெரிவித்தார். பிறகு விஜயனிடம் திரும்பி, ''கமிஷனர் இங்கேயே வர்றாராம். நீங்க ஹாஸ்பிடல் போய் யூனிட் ஒண்ணு தயார் பண்ணுங்க. உறுதியா தீர்மானம் ஆகிற வரைக்கும் எதுவும் பண்ண முடியாது. முதல்ல ஸென்ஸிட்டிவிட்டி டெஸ்ட் எடுத்துருங்க. கெட் ஆல் இம்யூன் ஸிரெம். ராமச்சந்திரனை 'ஸி.என்.எஸ்' பாக்கச் சொல்லுங்க. எப்பாடுபட்டாவது ஸ்பாஸம் நிறுத்தியாகணும்.''

டாக்டர் அமானுல்லா பி.ஏ.வை அழைத்து, ''எந்த விஷயமும் வெளியே, முக்கியமாகப் பத்திரிகைகளுக்குச் செல்லக் கூடாது'' என்றார். வீட்டு வேலைக்காரர்கள் எல்லோரும் எச்சரிக்கப்பட்டார்கள். ஆம்புலன்ஸ் அமைதியாக வந்து நின்றது.

வெண்மையான உடை அணிந்திருந்த ஆம்புலன்ஸ் சிப்பந்திகள் மயக்கமாகக் கிடந்த சூர்யாவை பிரமிப்புடன் பார்த்தபடி ஸ்ட்ரெச்சரில் அலைக்காமல் ஏற்றி, அவனை ரகசியமாகத் தொட்டுத் தொட்டுப் பார்த்தார்கள்.

சூர்யா வீட்டிலிருந்து வெளியேற்றப் பட்டான்.

**போ**லீஸ் கமிஷனர் முத்துக்குமரன் டாக்டர் அமானுல்லாவின் எதிரில் வந்து அமர்ந்தார். தம்முடைய கூர்மையான குரலால், ''டாக்டர்! சூர்யாவுக்கு என்ன ஆச்சு?'' என்றார்.

''சரியாத் தெரியலை, ஸிம்ப்டம்ஸ் எல்லாம் பார்த்தா ராபிஸ் மாதிரி இருக்கு...''

''கடவுளே! அதுக்கு மருந்தே கிடையாதே!''

''நோ! நோ! இருக்கு. ரொம்ப அட்வான்ஸ்ட் மெடிஸன் வந்தாச்சு. ஆனா பிரச்னை என்னன்னா நோய் தீவிரமான பிறகு எதுவும் செய்ய முடியாது. தீவிரமாகும் போதுதான் அறிகுறியே தெரியும்...''

''சூர்யாவுக்கு எப்படி?''

''பொதுவா நாய் கடிச்சதும் லோக்கல் ட்ரீட்மெண்ட் எடுத்து ஊசி போட்டுக்கணும். கடிச்ச நாயைக் கண்காணிக்கணும். பத்து நாளுக்குள்ள அது செத்துப் போச்சுன்னா, உடனே ஸ்பெஸிஃபிக் ட்ரீட்மெண்ட் ஆரம்பிச்சுடணும். இல்லைன்னா ரிஸ்க், வைரஸ் உள்ளே போய் நர்வஸ் ஸிஸ்டத்தை அடைஞ்சாச்சுன்னா அப்புறம் எதுவும் செய்ய முடியாது. அதுக்கே முப்பது நாள் ஆகும். ஆனா அந்த முப்பது நாளும் எந்த அறிகுறியும் தெரியாது. நாய் கடிச்ச நிகழ்ச்சி ஒண்ணுதான் நமக்கு முதல் எச்சரிக்கை. அதை விட்டாச்சுன்னா அடுத்தது ஸிவியர்'' என்றார் அமானுல்லா.

''சூர்யாவை எப்ப நாய் கடிச்சதாம்?''

''அதுதான் தெரியலை. அந்த மாதிரி இன்ஸிடென்டே நடக்கலைங்கறாங்க. அந்த நாயைக் கண்டுபிடிச்சு, அதை வைரஸ் டெஸ்ட் பண்ணி, 'டம்ப்பா' இல்லை ஃப்யூரியஸான்னு வித்தியாசம் கண்டு பிடிச்சு அப்புறம் அதுக்குத் தேவையான மருந்து கொடுக்கணும். இங்கே என்னடான்னா நாயே கடிக்கலைங்கறாங்க...''

''டாக்டர்! சூர்யா இப்ப எந்த நிலையில இருக்காரு?''

''டைக்னாஸ்டிக் முக்கியத்துவம் வந்தே ரெண்டு நாள் ஆச்சு. உடம்பு தாக்கித்

---



நீதிபதி : ஏம்பா, திரும்பத் திரும்ப அந்தக் கடையிலேயே திருடுகிறாயே, ஏன்?

திருடன் : அந்தக் கடைக்கு முன்னால் 'நன்றி மீண்டும் வருக!'ன்னு எழுதியிருந்தது. அதனால்தான் சாமி!

- காடியார் சம்பத்ராஜ்

தூக்கிப் போடுது. ஸார்...'' அமானுல்லா சற்றுத் தயங்கி, ''இனிமேல் கஷ்டம்னு நினைக்கிறேன்'' என்றார்.

கமிஷனர் திடுக்கிட்டு, ''டாக்டர்! வாட் டு யு மீன்?'' என்றார்.

''ஒரு ஸ்டேஜ்க்கு மேல இதுக்கு அமெரிக்கா போனாலும் மருந்து கிடையாது. ரெஸ்பிரேட்டரி அபாரடஸ் முழுகம் பாதிச்சிரும். எல்லாம் வேகமா நடக்கும். பாராலிஸிஸ்ல போய் ஒரு லிவியர் ஸ்பாஸத்துல பட்டுன்னு நின்னுரும்.''

''எது டாக்டர்?''

''உயிர்! இதுல நிறைய பிரச்னை இருக்கு. சூர்யாவுக்கு வெறிபிடிச்ச ரசிகர்கள் இருக்காங்க. அவங்களுக்கு எதை விளக்கினாலும் புரியாது. ஆஸ்பத்திரியையே உடைச்சிடுவாங்க. அதனால சூர்யாவை அரசாங்க ஆஸ்பத்திரிக்கு மாத்தறது நல்லது!''

''நோ! வேண்டாம் டாக்டர்! அந்தப் பிரச்னையை நான் பாத்துக்கறேன். எல்லாத்தையும் ரகசியமா வைக்கலாம். ட்ரீட்மெண்ட் விட்னஸுக்கு கவர்மெண்ட் டாக்டர்களை அனுப்பறேன். உங்க ஆஸ்பத்திரியை விட்டால் வேற எதுவும் 'பெஸ்ட்' இங்கே கிடையாது. டாக்டர்! ப்ளீஸ், எப்படியாவது சூர்யாவைக் காப்பாத்துங்க...'' என்றார் கமிஷனர்.

''லெட் அஸ் ப்ரே'' என்றார் டாக்டர் அமானுல்லா.

சூர்யாவைப் பற்றிய எல்லா விவரங்களும் ரகசியமாக வைக்க ஏற்பாடுகள் நடந்தன.

புரொடக்ஷன் மானேஜர் செல்லய்யா சூர்யாவின் வீட்டினுள் நுழைந்த போது, காவல்காரனால் தடுக்கப்பட்டார்.

''யோவ்! நான் புரொடக்ஷன் மானேஜருய்யா. சூர்யாவைப் பாக்கணும்.''

''அவரைப் பாக்க முடியாது.''

''ஏன்யா?''

''அவருக்கு உடம்பு சரியில்லை.''

''சரி, பி.ஏ.வைப் பாத்துட்டுப் போறேன்.''

''முடியாது. யாரையும் பார்க்க முடியாது.''

''டேய், வழி விடுறா. ஒருநாள் நஷ்டம் எவ்வளவுன்னு தெரியுமா உனக்கு? பதற்றத்துல உயிர் போகுதுய்யா. என்ன உடம்புக்கு சூர்யாவுக்கு?''

''தெரியாது'' என்றான் இறுக்கமாக.

''இங்கே இருக்கிறாரா? இல்லை, ஆஸ்பத்திரியிலா?''

''ஆஸ்பத்திரியில'' என்று சொன்னவன் 'டக்'கென்று நாக்கைக் கடித்துக் கொண்டு, ''இல்லை, இல்லை. இங்கேதான் இருக்காரு'' என்றான்.

''யோவ், நிசமாச் சொல்லு! சூர்யாவுக்கு என்ன உடம்புக்கு?''

''தெரியாதுய்யா!''



''நேத்து ஒரு பேஷண்ட்டைப் பார்த்ததும் டாக்டருக்குத் தலைகால் புரியலை!''

''எப்படிச் சொல்றீங்க?''

''முழங்கால் சிராய்ப்புக்குத் தலையில் 'டிங்சர்' தடவிட்டார்!''

– ரமேஷ்

''சரி, பி.ஏ.வைக் கேட்டு நாளைக்காவது ஷூட்டிங் வருவாரான்னு கேளு'' என்றார். அவன் இன்டர்காமில் சுந்தரத்துடன் பேசி, பிறகு திரும்பி, ''ம்ஹூம், இன்னும் ஒரு வாரத்துக்கு வர மாட்டார்!'' என்றான்.

''என்னது!'' என்றார் அதிர்ந்து போய்.

அவர் வெளியே நடந்து வந்த போது, 'திரைப் பூக்கள்' பத்திரிகை நிருபர் வரதன் அவரிடம் வந்து, ''அண்ணே! சூர்யாவுக்கு உடம்பு சரியில்லைன்னு ஷூட்டிங் வரலையாமே? நிசமாவா?'' என்றான்.

''வயித்தெரிச்சல். இன்னும் ஒரு வாரத்துக்கு வர மாட்டாராம்... என்ன உடம்புக்குன்னு தெரியலை.''

''கண்டுபிடிச்சாப் போச்சு!'' என்றான் வரதன். சூர்யா வீட்டு வேலைக்காரன் ஒருவன் அவனுடைய நண்பன்.

இன்டென்ஸிவ்-கேர் யூனிட்டில் ஏ.ஸி. அறையில் சூர்யா மயக்கம் கலைந்து படுக்கையில் துடித்துக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றி டாக்டர்கள் பதற்றமாக நின்றிருந்தார்கள். டாக்டர் ராமச்சந்திரனின் 'ஸி.எஸ்.எஃப்' பற்றிய டெஸ்டில் ராபிஸ் என்பது தெளிவாகி விட்டது. ''செப்டிஸ்மைட்'' நிச்சயமாகி விட்டது. சூர்யாவின் பெரிபெரல் நரம்பு கலைந்து ஹைட்ரோபோபியா வைரஸ்கள் ஆக்ரோஷத்துடன் முதுகெலும்பு, மூளைவரை சர்வநாசம் செய்து கொண்டிருந்தன.

சூர்யாவின் துடிப்புகள் திடீரென்று நின்றன. ஆனால் மூச்சு விட்டுக் கொண்டிருந்தான். அவன் உடல் விறைப்பாகி இருந்தது. வாய் திறந்தபடி இறுக்கமாக இருந்தது.

''கொஞ்ச நேரம் இந்த அமைதி இருக்கும். மறுபடி ரிஃப்ளெக்ஸ் ஆரம்பிக்கும். உடனே ஏ.எஸ். போட்டு விடுங்கள்.'' டாக்டர் அமானுல்லா அவனைத் தொட்டுப் பார்த்தார். மரக்கட்டை போல் இருந்தது உடல்.

கையில் அந்தத் தழும்பைப் பார்த்தார்.

(தொடரும்)

* எஜமான்

* முதல் பாடல்

# எஜமான்

பெரிதும் மிகைப்படுத்தப்பட்ட மூன்று சண்டைக் காட்சிகள்...

இரண்டு பணக்காரர்கள் மத்தியில் வளர்ந்துள்ள குரோதத்தையும், அதன் விளைவாக ஒருவர் மற்றவரைப் பழிவாங்க மேற்கொள்ளும் முயற்சிகளையும் விவரிக்கும் நிகழ்ச்சிகள்...

படம் நெடுகப் பரவலாகப் பாடல்கள்....

ரஜினி ரசிகர்களைத் திருப்திப்படுத்த வேண்டும் என்கிற நோக்கத்தோடு படைக்கப்பட்ட சில சம்பவங்கள்...

இயக்குவர் உதயகுமார் உருவாக்கியுள்ள 'எஜமான்'.

தம் மனம் கவர்ந்த பெண் தயாரித்துள்ள பணியாரம் என்பதாலேயே அதனை மிகவும் ரசித்து, ருசித்து உண்ணும் கட்டத்திலும், கோயிலின் முன் நெப்போலியனால் சிறுமைப்படுத்தப்படும் காட்சியிலும் ரஜினி மிக மிக இயல்பு.

தனிமனித வழிபாட்டின் உருவகமாகக் கிராமத்தவர் அனைவராலும் 'எஜமான்' என அழைக்கப்படுகிறவர், அதே மக்களின் கலையங்களிலிருந்து கூழையும் இதர உணவுப் பண்டங்களையும் திருட்டுத்தனமாக அள்ளி அள்ளித் தின்பது பாத்திரப் படைப்பில் முரண்பாடு. ரசிக்கவும் முடியவில்லை.

முழுக்க முழுக்க வேட்டி, சட்டை, மேல் துண்டில் ரஜினி. அந்தத் துண்டைச் சுழற்றித் தோளில் போடுவது அவர் அறிமுகப்படுத்தும் மற்றுமொரு 'ஸ்டைல்'.

அழகான, அடக்கமான மீனா. காதல் காட்சிகளில் மிக மிக அமரிக்கை.

ஐஸ்வர்யா அட்டகாசம். அதுவும், ரஜினியின் நெஞ்சத்தைத் தம்பால் வசிகரிப்பதற்காக அவர் முன்னிலையில் பாடி ஆடும் போது இதர கவர்ச்சி ஆட்டக்காரர்கள் அனைவரையும் ஓரம் கட்டி விடுகிறார்.

கொடுத்த பணியைக் கச்சிதமாகச் செய்து முடித்திருப்பவர் நெப்போலியன். பிரத்யேக ஷொட்டு.

தாத்தா வேடத்தில் நம்பியார். நடிப்பில் ஏகப்பட்ட நகாசு. 'பகவத் கீதை' அட்டைக்குள் 'காமசூத்திரம்' புத்தகத்தை வைத்துக் கொண்டு எப்போதும் படிப்பதும், மற்ற கிழவர்களைக் கூட்டி வைத்துக் கொண்டு பட விளக்கங்கள் அளிப்பதும் ரசனைக்குறைவாக விளங்கினால் அது அவர் தவறு அல்ல.

கணவனின் ஆண்மையை நிரூபிக்க வேண்டும் என்பதற்காகத் தலையணையை அடிவயிற்றில் கட்டிக் கொண்டு கர்ப்பிணியாகப் பாவனை செய்கிறாராம் மீனா. எப்போதும் அதே வீட்டில் கூடவே இருக்கும் அனுபவசாலியான பாட்டி மனோரமாவுக்கு வளைகாப்பு வரை அது தெரியாமலே போய் விடுகிறதாம்....

நம்பச் சொல்கிறார்கள்!

– சி. ஆர். கே.

# முதல் பாடல்

**க**ன்னியாஸ்திரீகளுக்குக் காதல் வரக் கூடாதா?



'வந்தால் என்ன தப்பு?' என்று கேட்கிறது படம்.

நல்லது. வித்தியாசமான களம். இயக்குநர், ஹீரோ, ஹீரோயின், மற்றும் பல புதுமுக விதைகள்.

கதை குறித்து யாராவது கேஸ் போட்டால் சுப்ரீம் கோர்ட் வரைக்கும் போகத் தயார் என்று தயாரிப்பாளர் - கம் - இசையமைப்பாளர் எஸ். ஏ. ராஜ்குமார் சொல்கிறார். அவசியமில்லை. ஹீரோயின், முதல் நாலைந்து சீன்களில் வெள்ளாடை தேவதையாக வந்தாலும் தொடர்ந்து வரும் காட்சிகளில் வழக்கம் போல நெரிசல், உரசல், கசமுசா.

எனவே, கன்னியாஸ்திரீ வேஷம் - ஏதோ கொஞ்ச நேரம் மாறுவேஷம் போட்டாற் போலத்தான் தோன்றுகிறதே தவிர, பெரிய பாதிப்பு ஒன்றுமில்லை.

புதுமுகம் மோனுஸ்ரீ. லாங் ஷாட்களில் தத்ரூபமாக நடிக்கிறார். அதோடு விடுங்க.

அசப்பில் ரமேஷ் அரவிந்தின் செகண்ட் எடிஷன் போலத் தோன்றும் ஹீரோ மது. தேவலை.

டைரக்டர் ரொம்ப லேட் பிக்-அப். மிகச் சரியாக இன்டர்வெல்லின் போதுதான் கதையை ஆரம்பிக்கிறார். அதற்குப் பிறகும் நகர்த்த முடியாமல் சிரமப்படுவதற்காக ஒரு 'த்லொ த்லொ.'

ஒரு ஷாட்டுக்கு ஒரு பாட்டு என்பது ராஜ்குமாரின் கணக்கு போலும். பாகவதர் படம் கெட்டது, போங்கள்.

இயக்குனருக்கு ஒரு வார்த்தை. உங்களைத் தனியாக இனம்காட்டிக் கொள்ள ஆசைப்பட்டிருக்கிறீர்கள். தப்பில்லை. இன்னும் கொஞ்சம் உழைப்பு வேணுமய்யா!

# மதுரை மீனாட்சி

**ஹீ**ரோ பெயர் மதுரை. ஹீரோயின் பெயர் மீனாட்சி. லோ, இதைவிடவும் பொருத்தமான டைட்டில் கிடைப்பதற்கில்லை.

சமீபகால நாளிதழ் செய்திகள் இரண்டை இணைத்துக் கதை பண்ணியிருக்கிறார்கள். மூக்கில் நெடி ஏறுகிற அளவுக்கு



✱ மதுரை மீனாட்சி

அரசியல். சகட்டுமேனிக்கு ஆளுங்கட்சி விமர்சனம். மறக்காமல் முதலிலேயே, 'எதையும் யாரையும் குறிப்பிடுவதல்ல'.

கலைஞர், இன்னும் பனை ஓலை, எழுத்தாணியை விட மாட்டேன் என்கிறார். ஐயா, மைக்ரோடிப் வந்து விட்டது சுவாமி! இன்னும் எத்தனை நாளைக்கு பராசக்தி பாணி வசனங்களையே கேட்டுக் கொண்டிருப்பது? கொளகொளத்த தலையணை போல டிராஃபிக் கான்ஸ்டபிள் உடையில் செல்வா. லாரல் - ஹார்டி ஷோவில் லாரலுக்கு ஹார்டி டிரெஸ் போட்ட மாதிரியிருக்கிறது.

ரஞ்சிதா செல்வாவைச் சீண்டும் காட்சிகளில் டச்சிங். மற்றபடி மிஸ்ஸிங்.

முதலமைச்சர் டெலிபோன் என்றால் உள்துறை அமைச்சர் கேப்டன் ராஜ், உதறோ உதறென்று உதறுகிறார். தற்கால த.நா. அமைச்சர்களின் ஒட்டுமொத்த உருவமாகப் படம் முழுக்க வெளுத்து வாங்குகிறார். அவருக்காக மட்டும் பார்க்கலாம்.

தேவா ரொம்ப ரொம்ப முன்னேறி விட்டார். கர்நாடக, மேலை இசையின் சரியான கலவையில் பாடல்களும் ரீ-ரெக்கார்டிங்கும் பரம சுகம்.

அமிர்தம் - டைரக்ஷனை விட ஒளிப் பதிவு நேர்த்தி.

சினிமாவுக்கான மொத்தக் கதைகளே முப்பதோ என்னவோதான் இருக்கிறது என்று விஷயமறிந்தவர்கள் குறைபட்டுக் கொள்கிறார்கள்.

ஆயினும் நம்மவர்கள் மூன்று நான்கைக் கூட தாண்ட மாட்டேன் என்கிறார்கள்.

- ஆர். பி. ஆர்.

ராஜாஜி

## 27. கங்கையைத் தாண்டினர்!

தமஸா நதிக்கரையில் படுத்து உறங்கின அயோத்தி நகர வாசிகள் காலையில் எழுந்து பார்த்தார்கள். ராமனையும் தேரையும் காணாமல் பிரமித்து, இங்குமங்கும் தேடிப் பார்த்துத் தேர்ச் சக்கரத்தின் சுவட்டைப் பின்பற்றிப் போய் மறுபடி அயோத்திக்குப் போகும் வழியோடு அது கலந்து போனதைப் பார்த்து ஏமாற்றமடைந்தார்கள். நகரத்துக்குத் திரும்பித் தத்தம் வீடுகளுக்குப் போய்ச் சேர்ந்தார்கள். கைகேயியைப் பலவாறாக நிந்தித்துத் திருப்தியடையப் பார்த்தார்கள். ராமனையிழந்த நகரம் அழகையிழந்து துயரத்தில் மூழ்கிற்று.

விடிவதற்கு முன்னமே புறப்பட்டுப் போன ரதம் வனத்தில் வெகுதூரம் சென்று விட்டது. பல நதிகளைக் கடந்து கோசல தேசத்தின் தெற்கு எல்லையை நோக்கிச் சென்றார்கள். ராமன் சுமந்திரனோடு பேசிக் கொண்டே போனான். ''நான் மறுபடியும் சரயூ நதிக்கரை வனத்தில் என்று வேட்டையாடுவேன்? வேட்டை யாடுவது சரியா? ஓரளவுதான் அத்தகைய காரியங்களில் அரச குமாரர்கள் ஈடுபட வேண்டும். அளவுக்கு மிஞ்சிப் போனால் அது கெட்ட வழக்கமாகும்.''

இம்மாதிரி பொழுதுபோக்காகப் பல விஷயங்கள் பேசிக் கொண்டே அவர்கள் சென்றார்கள்.

கோசல நாட்டின் தென் எல்லையைச் சேர்ந்ததும் ராமன் தேரை நிறுத்தி அயோத்தி நகரத்தை, திசை நோக்கி வணங்கினான்.

''நகரங்களுக்குள் மாணிக்கமே! இக்ஷ்வாகு வம்சத்தின் தலை நகரமே! என் வனவாச விரதம் முடிந்து தந்தை தாய்களையும் உன்னையும் மறுபடி தரிசிப்பேனா? நீ அந்தச் சந்தோஷத்தை எனக்குத் தர வேண்டும்'' என்று பிரார்த்தனை செலுத்தினான்.

தேர் கங்கை நதிக்கரையை அடைந்தது. நதியின் அபார அழகை அனுபவித்துக் கொண்டே சென்றார்கள். மிக ரம்மியமான ஓர் இடத்தைக் கண்டதும் ராமன், ''இவ்விடம் இன்று இரவு தங்கலாம்'' என்றான்.

குதிரைகளை அவிழ்த்து விட்டு ஒரு மரத்தடியில் எல்லோரும் உட்கார்ந்தார்கள். அந்தப் பிரதேசத்துக்கு அதிபதி குகன். ராமன் வருவான் என்பதைத் தன்னுடைய ஆட்களால் முன்னாலே அறிந்த குகன் தன் பரிவாரங்களுடன் ராம லக்ஷ்மணர்களைத் தரிசிக்க வந்தான்.

குகன் ராமனிடம் அபார அன்பு கொண்டவன். கங்கைக் கரை நிஷாதர்களுக்குத் தலைவன். மிகவும் செல்வாக்கும் புகழும் பெற்ற ஸ்தலபதி. தூரத்தில் வரும்போதே குகனைப் பார்த்துச் சக்கரவர்த்தித் திருமகனும் லக்ஷ்மணனும் எழுந்து அவனிடம் சென்றார்கள். குகன் ராமனை ஆலிங்கனம் செய்து வரவேற்றான்.

''இந்தத் தேசம் உனதாகவே வைத்துக் கொள்வாய். அயோத்தி எப்படியோ அப்படியே இதுவும் உன்னுடையதாகும். இத்தகைய அதிதி எவனுக்குக் கிடைப்பான்? இது என் பாக்கியம்'' என்றான் குகன்.

குகனுடைய உபசாரம் அபாரமாக இருந்தது. அவனுடைய ஆட்கள் பலவித உணவுப் பதார்த்தங்களும் பணியாரங்களும் கொண்டு வந்து வைத்தார்

கள். ''என் ராஜ்யத்தில் நீ சுகமாக இருக்கலாம். பதினான்கு வருஷங்களும் கழிக்கலாம். ஒன்றும் குறைவு இருக்காது. உன்னை உபசரிப்பது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும். அருள்வாய்!'' என்றான்.

ராமன் அவனை இறுகத் தழுவி, ''அப்பனே! உன் அன்பு எனக்குத் தெரியும். உன் உபசாரத்தை இங்கே பெற்றேன். அதற்கு மேல் நான் விரதத்தால் கட்டுப்பட்டு நிற்கிறேன். வனவாசம் செய்ய வந்திருக்கிறேன் அல்லவா? இதோ, இந்தக் குதிரைகள், என் தந்தைக்கு இவை மிகப் பிரியமான குதிரைகள். அவற்றிற்கு நல்ல தீனி ஏற்பாடு செய்வாய். நாங்கள் வனவாசத்துக்குரிய உணவைப் புசித்துப் படுக்கிறோம்'' என்றான்.

அன்று அந்த மரத்தடியில் ராமனும் சீதையும் தங்கினார்கள். லக்ஷ்மணன், குகனுடனும் சுமந்திரனுடனும் பேசிக் கொண்டே அன்று இரவும் தூங்காமலே கழித்தான்.

குகன் லக்ஷ்மணனுக்குச் சொன்னான் :

''அப்பனே, நீ படுத்துத் தூங்குவாய். அதோ உனக்கு இடம் சரியாகப் பண்ணி வைக்கப்பட்டிருக்கிறது. இந்த வனத்தில் என்னையறியாமல் யாரும் ஏதும் செய்ய முடியாது. என்னுடைய ஆட்கள் மிகக் கவனமாகக் காவலிருக்கிறார்கள். ராமனைப் பற்றிக் கவலையோ பயமோ வேண்டியதில்லை - தூங்குவாய்.''

இதைக் கேட்டு லக்ஷ்மணன், ''குகனே! எனக்குத் தூக்கம் வரவில்லை. அதோ சீதை, ஜனக மகாராஜனின் மகள், தசரத சக்கரவர்த்தியின் மருமகள் தரையில் படுத்திருக்கிறாள். மூன்று உலகமும் யுத்தம் செய்து வசமாக்கிக் கொள்ளும் சக்திவாய்ந்த புருஷோத்தமன் புல் தரையின் மேல் படுத்துக் கிடக்கிறான். இதைப் பார்த்தும் எனக்கு எப்படித் தூக்கம் வரும்?'' என்றான்.

''ராமனை வனத்துக்கு அனுப்பி விட்ட அயோத்தி நகரம் எவ்வாறு பிழைக்கும்? அரண்மனை அந்தப்புரம் அழுகுரலால் நிரம்பும். கௌசல்யையும் என் தாயும் இப்போது உயிருடன் இருக்கிறார்களோ, உயிர் நீத்தார்களோ, எனக்குச் சந்தேகமாகத்தான் இருக்கிறது. 'வனம் போ' என்று தந்தை எவ்வித சொல்லி விட்டாரேயொழிய, ராமனை அனுப்பி விட்டபின் அவர் உயிர் வைத்திருப்பது சந்தேகம். அவர் இறந்தால் பிறகு எங்கள் தாய்மார்களின் கதியும் அதுவே. அந்திமக் கடன் செய்வதற்குக் கூட நாங்கள் கொடுத்து வைக்கவில்லை. எங்களுடைய வனவாச விரதம் முடிந்து, நாங்கள் திரும்பி



ஊர் போய்ச் சேரும் போது, தந்தையும் தாய்மார்களும் உயிருடனிருந்து சந்தோஷப்படுவார்களா என்பது எனக்கு மிகவும் சந்தேகமாகத்தான் இருக்கிறது'' என்றான்.

இப்படித் துயரம் நிறைந்த மொழிகளை மனமுருகிப் பேசினான் லக்ஷ்மணன். லக்ஷ்மணன் சொன்னதைக் கேட்ட குகனும் கண்ணீர் விட்டான். இரவெல்லாம் இவ்வாறு பேசிக் கொண்டு கழித்தார்கள்.

அதிகாலையில் ராமன் எழுந்து லக்ஷ்மணனுக்குச் சொன்னான் :

''நதியைத் தாண்டிப் போக வேண்டும். குகனுக்குச் சொல்லி இந்த அகலமான நதியைக் கடப்பதற்குப் பெரிய ஓடம் ஏற்பாடு செய்யும்படிச் சொல்லுவாய்!'' என்றான்.

அவ்வாறே குகனும் தன் காரியஸ்தர்களுக்குச் சொல்லி ஒரு நல்ல ஓடத்தை அமைத்து ராமனுக்குத் தெரிவித்தான். ஆயுத பாணிகளாக ராமலக்ஷ்மணர்களும் சீதையும் நதியை நோக்கிச் சென்றார்கள்.

சுமந்திரன் ராமனை வணங்கி, ''இனி நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்டான்.

ராமன் சுமந்திரன் தோளின் மேல் தன் கையை வைத்து, ''சுமந்திரரே, சீக்கிரம் அயோத்தி திரும்பிச் செல்லுவீர். அரசன் பக்கத்திலிருப்பீர். அவரை நன்றாகப் பார்த்துக் கொள்வீர்'' என்றான்.

''உலகத்தில் சீலம், அத்தியயனம், நல்ல நடத்தை இவையெல்லாம் ஒரு பயனும் இல்லை என்பதை இப்போது அறிந்தேன். நீயும் தம்பியும் வைதேஹியுடன் வனத்தில் வசிக்கப் போகிறீர்களே! எங்களுக்கு இனி என்ன கதி? கைகேயி ஆட்சியில் நாங்கள் எப்படிப் பிழைப்போம்?'' என்று சொல்லிச் சுமந்திரன் குழந்தை போல் உரக்க அழுதான்.

ராமன் அவன் கண்களைத் துடைத்து, ''எங்கள் குலத்துக்கு உத்தமமான நண்பர் உம்மைப் போல் வேறு யாரும் இல்லை. தந்தை துக்கம் அடையாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது உம்முடைய கடமை. மனம் உடைந்து போயிருக்கிறார். அவர் என்ன சொன்னாலும் அது சரியா அல்லது கைகேயியைத் திருப்தி செய்வதற்காகச் சொல்லுகிறாரா என்று விசாரியாமல் அவர்



சொன்னபடி செய்து அவருடைய மனத்தில் கஷ்டம் உண்டாகாமல் பார்த்துக் கொள்ளுங்கள். வனத்திலிருக்கும் எங்களைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். நாங்கள் பதினான்கு வருஷம் சுலபமாகக் கழித்துத் திரும்பி வந்து விடுகிறோம் என்று நான் சொன்னதாக அரசரிடமும் எல்லாரிடமும் சொல்ல வேண்டும். பரதனைச் சீக்கிரம் தருவித்து அரச பதவியில் அமர்த்தி, எங்கள் அன்பைச் சொல்லி, பெரிய அன்னைகள் இருவரையும் தன்னைப் பெற்ற தாய் கைகேயியைப் போலவே பார்த்துக் கொள்ளச் சொல்ல வேண்டும்'' என்றான்.

இவ்வாறு ராமன் சொன்னான்.



''அதிசயமாயிருக்கே! ஏழையான உனக்குத் தலைவர் தன்னோட பெண்ணைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்துட்டாரே! எப்படி...?''

''நான் கலெக்டர் ஆபீஸ்ல சர்வே செக்‌ஷன்ல வேலை பார்க்கிறதால புறம்போக்கு நிலங்கள் எங்கெங்கே இருக்குன்னு எனக்கு நல்லாத் தெரியும்ன்னேன்...''

– மதுரை ஜெயஸ்ரீராஜ்

ஆனாலும் சுமந்திரன் துக்கம் தாளாமல், ''நான் எப்படித் திரும்பிப் போய், என்ன சொல்லி, யாரைச் சமாதானப் படுத்துவேன்?'' என்றான். தேரைப் பார்த்து, ''நீ இல்லாமல் சூனியமாக நிற்கும் இந்தத் தேரை நான் எப்படி ஓட்டுவேன்?'' என்று அழுது கொண்டேயிருந்தான்.

ராமன் மறுபடியும் சுமந்திரனுக்கு ஆறுதலும் தைரியமும் சொல்லிக் கஷ்டங்களைச் சகித்துக் கொண்டு பொறுமையுடன் இருப்பதே அவன் கடமை என்று கூறி அனுப்பினான்.

''குகனே! நீ விரும்பியபடி உன் ராஜ்யத்தில் நான் சந்தோஷமாக இருந்து கொண்டு பதினான்கு வருஷங்கள் கழிக்கலாம். ஆனால் அது நான் பிரதிக்ஞை செய்த வனவாசம் ஆகுமா? தகப்பனார் கொடுத்த வாக்கைச் சத்தியமாக்க நான் அயோத்தியை விட்டு வந்திருக்கிறேன். ஆனபடியால் தாபஸ வாழ்க்கை வாழ வேண்டும். ருசியாகச் சமைக்கத் தெரிந்தவர்கள் பக்குவப்படுத்திய பதார்த்தங்களை நான் தொடக் கூடாது. பழம், கிழங்கு, காய் அல்லது விலக்கப்படாத மாமிசத்தை நாங்களே சம்பாதித்து வேள்வித் தீயில் சுட்டு ஆகாரம் செய்ய வேண்டும்.''

இப்படிச் சொல்லிக் குகனைச் சமாதானப்படுத்தித் தங்கள் தலை மயிரை அவ்விடத்தில் ஆலமரத்துப் பாலால் திரித்து ஜடையாகச் செய்து முடித்துக் கொண்டார்கள்.

சீதையை ஓடத்தில் ஏற்றி உட்கார வைத்து, பிறகு இரு ராஜகுமாரர்களும் ஏறினார்கள். குகன் தன் ஆட்களுக்குச் சொல்லி ஓடத்தைச் செலுத்த உத்தரவிட்டான்.

ஓடக்காரர்கள் ஓடத்தைக் கங்கையில் வேகமாகச் செலுத்தினார்கள். நடு ஆற்றில் சீதை பாகீரதியைத் தியானித்து, ''தேவி! எங்களுடைய விரதத்தை முடித்து மறுபடியும் உன்னைக் கடந்து க்ஷேமமாக ஊர் திரும்ப அருள்வாயாக!'' என்று சொல்லி நமஸ்கரித்தாள்.

பிறகு பேசிக் கொண்டே கங்கையைக் கடந்து அக்கரை அடைந்தார்கள். அங்கே மூவரும் முதல் முதல் வேறு துணையின்றி நின்றார்கள்.

''லக்ஷ்மணா! நீதான் இனி எனக்குக் காவல் படை!'' என்றான் ராமன். ''நீ முன்னால் செல். சீதை உன்னையடுத்தாற்போல் செல்ல வேண்டியது. நான் உங்கள் இருவருக்கும் பின்னால் வருவேன். வனவாசத்தின் கஷ்டங்கள் சீதைக்கு அதிகமாயிராமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். இனி ஜனக் கூட்டம் கிடையாது. விளையாட்டு வேடிக்கைகள் கிடையாது.''

அன்று ராமனுக்குக் கௌசல்யா தேவியின் நினைவு வந்து ரொம்பவும் துக்கப்பட்டான்.

''லக்ஷ்மணா! நீ திரும்பிப் போய் என்னைப் பெற்ற கௌசல்யா தேவியையும், உன்னைப் பெற்ற சுமித்திராதேவியையும் பாதுகாத்தல் நலமல்லவா? நான் எப்படியாவது சமாளித்துக் கொள்ளுகிறேன்'' என்றான். இதற்கு லக்ஷ்

மணன், ''மன்னிக்கவும்; நான் அயோத்திக்குத் திரும்பிப் போக முடியாது'' என்றான். இது ராமன் எதிர்பார்த்த பதிலே.

இப்படி அடிக்கடி மானுஷ சுபாவம் தலையெடுத்துச் சக்கரவர்த்தித் திருமகன் துக்கப்படுவதையும் பேசுவதையும் பார்ப்போம். இதுவே ராமாயணத்தின் அழகு. சர்வ வல்லமை பொருந்திய ஈசுவரன் ஈசுவரனாகவே இருந்து எல்லாம் செய்து முடித்துவிட்டால் பிற்பாடு அவதாரம் ஏது? சாமான்ய தருமம் நிலைநாட்டுவது ஏது? ஆதி அவதாரங்களுக்கும் பிந்திய அவதாரங்களுக்கும் பேதம் இதுவே. ராமாவதாரத்தில் மானுஷ சுபாவத்தின் போக்கும் அதனுடன் சாதாரண தருமத்தின் விளக்கமும் சேர்ந்து வரும். இதைத்தான் ராமசந்திரன் யுத்தம் முடிந்து சீதை அக்னிப் பிரவேசம் செய்யும் சமயம் சொன்னான் :

ஆத்மானம் மானுஷம் மன்யே
ராமம் தசரதாத்மஜம்

''நான் என்னைத் தசரதன் மகன் ராமன் என்கிற மனிதனாகத்தான் எண்ணி வருகிறேன். உண்மையில் நான் யார்? யாரைச் சேர்ந்தவன்? எதற்காகப் பிறந்தேன்? - இந்த விஷயங்கள் எனக்கு எப்படித் தெரியும்? தாங்கள்தான் எனக்குச் சொல்ல வேண்டும்.'' இவ்வாறு அச் சமயம் ராமனே சொன்னதாக வால்மீகி எழுதியிருக்கிறார்.

கங்கையின் தென் கரையில் ராமன் துக்கப்பட்டுப் பேசிய போது லக்ஷ்மணன் ராமனுக்குத் தைரியம் சொல்லித் தேற்றினான்.

அன்றைய இரவு ஆலமரத்தடியில் கழித்து, மறுநாள் காலையில் புறப்பட்டு, அஸ்தமிக்கும் சமயம் பாரத்வாஜ முனிவருடைய ஆசிரமம் போய்ச் சேர்ந்தார்கள்.

அவ்விடம் உபசாரங்களைப் பெற்று, ''எந்த இடத்தில் நாம் வனவாசம் ஏகாந்தமாகச் செய்ய முடியும்?'' என்று முனிவரைக் கேட்டு, அவருடைய யோசனையையும் ஆசியையும் பெற்றுச் சித்திரகூடம் சென்றார்கள்.

(தொடரும்)



''மழையைக் காரணம் காட்டி, ஜான வாசத்தைக் கேன்சல் பண்ணிடலாமுன்னு நினைச்சேன்...''

''என்ன ஆச்சு?''

''எல்லோருக்கும், குடை வாங்கித் தந்து, நடத்தும்படி ஆயிடுச்சு....!''

- ஆர். வசந்த குமார்



''யாரோ ஒருத்தர் வந்து, உங்க முகவரி கேட்டார் சார்....''

''சொல்ல வேண்டியதுதானே?''

''கையில் உருட்டுக் கட்டையை வெச்சுக்கிட்டுக் கேட்டாரே!''

- எஸ்.பி. நீலமேகம்

''அரசியல்வாதி படம் எடுக்கும் போதே நினைச்சேன் இப்படி ஆகும்னு...''

''ஏன்... என்ன ஆச்சு?''

''படம் பார்க்க தியேட்டருக்கு லாரியில் ஆளுங்களைக் கூட்டிகிட்டு வந்திருக்காரு...''

- வி.கி. குமார்



# சகமனிதன் என்பவன்...

சத்தியசந்தன்

இரவு பன்னிரண்டு மணி. காற்றையும், பனியையும் கிழித்துக் கொண்டு சென்ற அந்த அரசு பஸ், இஞ்சக்குடி முடிகொண்டான் ஆற்றுப் பாலத்தில் இறங்கும் போதுதான், அந்த விபத்து நடந்தது.

டிரைவர் பிரேக் போட்டவுடன், பஸ் குலுங்கி இடதுபுறம் இழுத்து நின்றது.

முன் சீட்டின் கம்பியில் மோதிக் கொண்ட சண்முகம் விழித்துக் கொண்டு கண்ணாடி வழியாகப் பார்த்தான்.

டிரைவர் கதவைத் திறந்து கீழே குதித்தவர் எதையோ பார்த்து விட்டு ஓடுவது, நிலவு வெளிச்சத்தில் நன்றாகத் தெரிந்தது.

பயணிகள் ஜன்னல் ஷட்டரைத் தூக்கி விட்டு என்னவென்று பார்த்தார்கள்.

சில பயணிகளுடன் கண்டக்டரும் இறங்கிப் பார்த்தார். அவரும் டிரைவர் ஓடும் திசையில் ஓட ஆரம்பித்தார்.

முன் சக்கர என்ஜின் அடியில் ஒருவன் விழுந்து கிடந்தான். சக்கரத்தின் அடியில் சைக்கிள் நசுங்கிச் சுக்குநூறாக நொறுங்கிக் கிடந்தது. அவனுடன் வந்தவன்...

"அய்யய்யோ... என்ன பண்ணுவேன், வரும்போதே நா மிதிக்கிறேன்னு சொன்னேன். கேக்காம மிதிச்சானே... அவங்க வூட்டுல என்ன பதில் சொல்லப் போறேன்..." என்று தலையில் அடித்துக் கொண்டு அழ ஆரம்பித்தான்.

சப்தம் கேட்டுச் சாலை ஓரத்தில் இருந்த ஒன்றிரண்டு குடிசைகளின் கதவு திறந்து கொண்டு திபுதிபுவென்று ஓடி வந்தார்கள்.

சண்முகத்திற்கு நடந்தது என்னவென்று புரிந்தது. கீழே இறங்கினான். பஸ்ஸின் கீழே குனிந்து, அடிபட்டுக் கிடந்தவனைப் பார்த்தான். அவனிடத்தில் லேசான முனகல் சப்தம் வந்தது. "உசுரு இருக்கு..." என்று கத்திக் கொண்டே அவனைக் கைத்தாங்கலாக வெளியே இழுத்துப் பார்த்தான். மூக்கில் கை வைத்தான். நெஞ்சில் கை வைத்துப் பார்த்தான். மூச்சு நன்றாக வந்து கொண்டிருந்தது. இருபத்தைந்து வயது இளைஞன். தலையில் அடிபட்டு ரத்த குழம்பாகத் தலை மொழுகியிருந்தது. மூக்கின் வழியாக ரத்தம். உதடு கிழிந்து தொங்கியது. ரத்தம் வேஷ்டி, சட்டை நனைந்து தார்ச் சாலையில் ரோடு போட்டது.

"தேறாது... இப்ப உயிர் போயிடும்..." என்றார் ஒரு பயணி.

"உசுரு இருக்கு... பாவி டிரைவரும், கண்டக்டரும் செத்துட்டானா, இருக்கானான்னு பார்க்காம ஓடிட்டானுங்க. படுபாவிப் பயலுங்க...." என்று சண்முகம் கத்தினான்.

"ஊர்க்காரன்கள் சேர்ந்து கொண்டு அடிப்பாங்கன்னு ரெண்டு பேரும் ஓடிட்டாங்க... அவங்க தங்களோட உயிரைக் காப்பாத்திக்க வேற என்ன செய்ய முடியும்? ஓடுறதுதான் ஒரே வழி!"

"என்னய்யா... வழி? ராத்திரி நேரம் தானே! இது என்ன டவுனா, இல்ல சின்ன கடைத் தெருவா, சேர்ந்து கொண்டு அடிக்க? அடிபட்டவன் வெளி ஊர்க்காரனா இருந்தா யாரு பாப்பா அவனை?" சண்முகத்துக்குக் கோபம் கொப்பளித்தது.

இவனை உடனே ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டும். இந்தப் பக்கம் பேரளம் பத்து கிலோ மீட்டர். இந்தப் பக்கம் இருமருகல் பத்து கிலோ மீட்டர். இடையில் பொட்டல் காடு. ரோடு ஓரம் கருப்பங் கொல்லை. போன் செய்து ஆம்புலன்ஸ் வரவழைக்கக் கூட இந்த இரவில் வசதியில்லை. அதற்கும் பேரளமோ... இருமருகலோதான் போக வேண்டும். ஏதாவது கார், வேன், லாரி வருகிறதா? என்று பார்த்தார்கள்.

அரை மணி நேரம் ஆகியும் ஒன்றும் வரக் காணோம்.

கடைசியாக சண்முகத்திற்கு ஒன்று தோன்றியது.

"கொஞ்சம் வாங்க... பையனைத் தூக்கி பஸ்ஸுல ஏத்தி ஆஸ்பத்திரி கொண்டு போயிடுவோம்" என்றான்.

"எந்த பஸ்ஸுல...?"

"இதுலதான்..."

"ஓட்டறது யாரு?"

"நா... ஓட்டுவேன்"

"கொண்டு போறது வேஸ்ட்டுங்க... இப்பவே கண்ணு சொருகிட்டுது... கொஞ்ச நேரத்துல உசுரு போயிடும்."

"இன்னும் கொஞ்ச நேரத்துல ஆஸ்பத்



திரில சேத்திட்டா இவனைப் பொழைக்க வச்சிடலாம். நான்தான் ஓட்டறேன்னு சொல்றேன், அப்புறம் ஏன் யோசனை? வாங்க... தூக்குங்க.''

''பஸ்ஸை எடுக்கிறது தப்புங்க... கார்ப்பரேஷன்காரனுக்கு யார் பதில் சொல்றது. போலீஸ் கேஸாயிடும். ஓடின டிரைவர் போலீஸ் ஸ்டேஷன்ல சரண்டர் ஆயிடுவான். அப்புறம்தான் போலீஸ் வரும். வண்டியை எடுக்கணும்.''

என்னங்கையா? போலீஸ்... கீலிஸ்னு பேசறங்க, ஒரு உசுரு துத்து உயிரா... கொலை உயிராக் கெடக்கு. திரும்பிப் பாக்காம டிரைவரும், கண்டக்டரும் ஓடிட்டானுங்க... அடிபட்டவன் யாரு? ஆடா? மாடா? சக மனுசன். உயிரு போறத நாம எப்படிப் பாத்துக்கிட்டு இருக்க முடியும்? இதுவே உங்களோட அண்ணனாவோ தம்பியாவோ இருந்தா இது மாதிரி சொல்வீங்களா?

சண்முகத்தின் பேச்சு அங்கு யாருக்கும் பிடிக்கவில்லை. ஒருவரும் பேசாமல் மௌனம் சாதித்தார்கள்.

சட்டென்று சண்முகம் சுறுசுறுப்பானான்.

அவன் நண்பனும், இவனும் சேர்ந்து பஸ்ஸில் ஏற்றினார்கள்.

டிரைவர் சீட்டில் உட்கார்ந்து கொண்டு ஸ்டார்ட் செய்து ஒரு நிமிஷம் யோசித்தான். இங்கிருந்து நாகப்பட்டினம் ஐம்பது கிலோ மீட்டர். திருவாரூர் இருபது கிலோ மீட்டர். இவனை உடனே சேர்க்கணும் என்று நினைத்தவன் பஸ்ஸை திருவாரூர்ச் சாலையில் திருப்பினான்.

அரசு மருத்துவமனை மங்கிய வெளிச்சத்தில் தூங்கி வழிந்தது.

இருவரும் இறக்கினார்கள்.

நாற்காலியில் உட்கார்ந்து கொண்டே தூங்கிக் கொண்டிருந்த நர்ஸ், சப்தம் கேட்டு, ''என்னங்க... என்னாச்சு... அங்கேயே படுக்க வையுங்க...'' என்று ஓடி வந்தாள்.

''பஸ். ஆக்ஸிடெண்ட். டாக்டர் இருக்காரா? உடனே பார்க்கணும்.''

''இப்பத்தான் அவசர கேஸ் ஒண்ணு பார்த்துட்டு வீட்டுக்குச் சாப்பிடப் போனார்...''

''போன்ல... கூப்பிடுங்க...''

நர்ஸ் போன் செய்து விட்டு ஏதோ... ஊசி கொண்டு வந்து போட்டாள். தலையைத் தவிர மற்ற இடங்களைப் பஞ்சு வைத்துத் துடைத்தாள்.

பேஷியன்ட் தலையில் இருந்து ரத்தம் வருவது நிற்கவில்லை. அவன் நண்பன்

கலங்கிய கண்களுடன் நின்றான்.

மணியைப் பார்த்தான் சண்முகம். இரண்டு. பகல் முழுவதும் அலுவலகத்தில் ஜீப் ஓட்டிய அசதி. உடம்பு வலித்தது. அதிலேயும் கேம்ப் சென்ற இடத்தில் ஜீப் டயர் பங்சர் ஆனதால்தான் ஊருக்குச் செல்ல கடைசி பஸ்ஸை பிடிக்க நேர்ந்தது. இல்லையேல் ஆறு மணி பஸ் பிடித்து, எட்டு மணிக்கெல்லாம் வீடு சென்றிருக்கலாம். இன்று லேட்டானது இவனுக்காகவா? அவனின் நல்ல நேரமா? நாளைய பிரச்னையைச் சமாளிக்க நமது கெட்ட நேரமா? இதுதான் நேரம் என்பதா? இந்த விபத்து நடக்காமலிருந்தால் இந்நேரம் வீடு சென்று சாப்பிட்டுப் படுத்திருக்கலாம். அடிபட்டவன் யார்? என்ன ஊர் என்று கூடக் கேட்கவில்லை. அவன் அதே இடத்தில் செத்திருந்தால் நாமும் அனுதாபப்பட்டு நடந்தே வீட்டுக்குச் சென்றிருக்கலாம். அவனைத் தூக்கிய போது, அவனிடமிருந்து வந்த முனகலைக் கேட்டு, எப்படி பார்த்துக் கொண்டிருக்க முடியும்? அத்தனை பேரும் நமக்கு ஏன் வம்பு என்று ஒதுங்கிச் சென்ற போது, எனக்கு ஏன் பொறுப்பு வந்தது? நான் டிரைவர் என்பதாலா?

**வா**சலில் நின்ற பஸ்ஸின் ஓரமாகத் தமது பைக்கை நிறுத்தி விட்டு ஓட்டமும், நடையுமாக வந்தார் டாக்டர்.

எழுந்து நின்று வணக்கம் வைத்தான் சண்முகம்.

பேஷண்டை பரிசோதித்தார்.

''நர்ஸ்... ஆபரேஷன் தியேட்டர் ரெடி பண்ணுங்க...'' என்று சொல்லிக் கொண்டே சண்முகத்தைப் பார்த்தார் டாக்டர். ''நல்ல வேளை இப்ப கொண்டு வந்தீங்க, இன்னும் இருபது நிமிஷத்துக்குள்ளே ரத்தம் கொடுத்து, ஆபரேஷன் பண்ணியாகணும். இல்லைன்னா... தலையில ரத்தம் 'கிளாட்' ஆயிடும். அப்புறம் மேஜர் ஆபரேஷன் தான். தஞ்சாவூர், இல்லைன்னா நாகப்பட்டினம் போறது மாதிரி இருக்கும். இப்ப கூட யாரு வந்திருக்கா? ரத்தம் செக் பண்ணுங்க... வங்கியில ரத்தம் இல்லே...'' என்றார் டாக்டர்.

அடுத்த சில நிமிடங்களில்...

''சார்... பேஷண்டோட ரத்தம் ஏ நெகட்டிவ், இவங்க ரெண்டு பேரோட ரத்தமும் சேராது.''

''யாரிடமாவது வெளியில வாங்க முடியுமான்னு பாருங்க சார்... பணம் கொடுத்துடலாம்...''

''இந்த விடியற்காலை நேரத்துல முடியாது ஸார்... காசுக்கு ரத்தம் கொடுக்கிறவன் தண்ணியடிச்சிட்டுக் கெடப்பான்.''

''எப்படியாவது கூட்டி வர ஏற்பாடு

செய்யுங்க ஸார்....'' சண்முகம் அழும் நிலைக்கு ஆளானான். இதுவரை பட்ட கஷ்டங்கள் மனக்கண்ணில் வந்து போயின. எல்லா தெய்வங்களையும் வேண்டினான்.

''வெளியில நிக்கிற பஸ்ஸின் டிரைவர், கண்டக்டர் எங்கே? அவங்களையும் கூப்பிட்டு செக் பண்ணுங்க... என்ன குரூப்புன்னு பாப்போம்...'' என்று டாக்டர் சொல்ல... சண்முகத்திற்கு வியர்த்தது.

''அவங்க இல்ல சார்... பஸ் ஆக்ஸிடெண்ட் நடந்ததும், அடிபட்டவனைப் பார்க்காம ரெண்டு பேரும் ஓடிட்டாங்க... நான் பயணி. இவர் பேஷண்டோட நண்பர். ரெண்டு பேரும் சேர்ந்துதான் அதே பஸ்ஸில இங்க கொண்டு வந்தோம்.''



''நான் ஒரு தப்புப் பண்ணினதால் தான் எனக்கு இங்கிலீஷ் வராம போயிடுச்சி?''

''என்ன?''

''இங்கிலாந்துல பிறக்காமப் போனதுதான்!''

- எஸ். ஸ்ரீராம்

''என்னது...? அதே பஸ்ஸையா?'' என்று டாக்டர் பின்வாங்கினார். ஆச்சர்யத்தால் புருவம் உயர்ந்தது. ''நீங்க... எப்படி பஸ் ஓட்டி வந்தீங்க, போலீஸ் கேஸா விடுமே... என்ன காரியம் பண்ணிட்டீங்க?''

''அப்புறம்... என்ன சார் பண்றது... ஒரு உசுரு போராடிக்கிட்டிருக்கு. எப்படி சார் பாத்துக்கிட்டு இருக்க முடியும்? சுத்துப் பட்டு பத்து கிலோ மீட்டர் தூரம் போன் வசதியோ... வண்டி வசதியோ இல்ல... ஏதாவது, கார், வேன், லாரி வருதான்னு கொஞ்ச நேரம் பார்த்தோம். ஒண்ணும் வரக் காணோம். அதான்...''



''இருந்தாலும் நம்ம தலைவர் இவ்வளவு வெளிப்படையா பேட்டி குடுக்கக் கூடாது!''

''என்ன விசஷயம்?''

''இருபதாண்டு அரசியல் வாழ்க்கைல என்ன லாபம்னு கேட்டதுக்கு, மூணு சின்ன வீடுகள்தான் மிச்சம்னு புலம்பிருக்காரே!''

- அம்பை தேவா

''உங்க பேரு... எங்க வேலை பார்க்கிறீங்க...''

''நான் சண்முகம். மயிலாடுதுறை அக்ரிகல்சர் டிபார்ட்மெண்டுல ஜீப் டிரைவர். என்னால பஸ் ஓட்ட முடியும்ங்கிறதாலதான் அந்த உதவியை என்னால செய்ய முடிஞ்சது. சக மனுசன் விழுந்து கெடக்கான். உதவிக்கு எந்தப் பயணியும் வரலை... அவனவனும் நமக்கு ஏன் வம்புன்னு ஒதுங்கிப் போறான். இப்படி மனிதர்கள் இருந்தா என்ன சார் பண்ண முடியும்? இதனால நாளைக்கு பஸ்ஸைக் கடத்திய தீவிரவாதின்னு கூட எனக்குப் பட்டம் வரும். திருடன்னு போலீஸ் வரும். அதனால என் வேலை போனாலும் நான் கவலைப்பட மாட்டேன். இவனை உங்களிடம் சேர்த்திட்டேன். இனி காப்பாத்த வேண்டியது உங்க பொறுபபு.''

டாக்டர் உடல் சிலிர்த்து நிமிர்ந்து நின்றார்.

''நர்ஸ்... இங்க வாங்க நான் ரத்தம் தர்றேன். என்னோட ரத்தமும் பேஷண்டோட குருப்தான்'' என்று டாக்டர் உட்கார்ந்து கொண்டு கையை விரைப்பாக்கினார்.

''எனக்குத் தெரிஞ்சு இந்த ஒரு ஹோட்டல்லதான் சுதந்திரமிருக்கு!''

''எப்படி சொல்றீங்க?''

''பாருங்களேன், காசில்லாமல் சாப்பிட்டதும், உங்களாலே என்ன வேலை செய்ய முடியும்னு நம்மளையே ஒரு வார்த்தை கேக்கறாங்க!''

- எஸ். ரமேஷ்



# பாண்டியன் மகள்

## 10. சமுத்திர பந்தன்

மேலைக் கடலுக்குள் அந்த மாலைப் பொழுதில் தனது சீற்றம் மிகுந்த கதிர்களை அடக்கிக் கொண்டு கதிரவன் இறங்கி விட்டாலும், அவன் சீற்றத்தைப் பிரதிபலித்த சிவந்த ஒளி அந்தப் பகுதியில் ஏதோ தீப்பிடித்து எரிவது போலத் தெரிந்து கொண்டிருந்தது. பஞ்சுப் பொதிகளைப் போல் வானில் நீந்திய மேகத் துணுக்குகளும் சிவந்து காணப்பட்டன. கதிரவனது கோபத்தை வாங்கிக் கொண்ட மேலைக்கடலும் சேர நாட்டின் அந்த கடற்பகுதியை நோக்கித் தனது அலைகளை வேகத்துடன் வீசிக் கொண்டிருந்தது. அலைகளின் சீற்றத்தையோ, வீசிக் கொண்டிருந்த பலமான காற்றையோ லட்சியம் செய்யாத மீனவர், தங்களது கட்டுமரங்களை மணலில் சர்சரென்று பாய்ச்சி நிறுத்தி விட்டுப் பெரும் வலைகளுடனும், கூடைகளுடனும் இறங்கிக் கரையில் நடந்தனர். கூடைகளிலிருந்து சிதறிய மீன்களைக் கொத்திச் செல்ல கடற்பறவைகளும் காகங்களும் கூச்சலிட்டுக் கொண்டு அவர்களைத் தொடர்ந்து கொண்டிருந்தன. இதையெல்லாம் ரசித்தபடி கடற்கரையை ஒட்டி நீண்டிருந்த பாதையில் புரவியொன்றின் மீது வந்து கொண்டிருந்தான் ஒரு வீரன். அவன் குழல்களிலும் தாடியிலும் தெரிந்த நரையும், லேசாகச் சுருக்கம் விழுந்த முகமும் அவன் நடுத்தர வயதைக் கடந்து விட்டதைத் தெளிவுபடுத்தினாலும், அவன் நிமிர்ந்து அமர்ந்திருந்த முறையும், உரமேறிய உடற்கட்டும் வயது ஏறினாலும் உடல் தளர்ந்து விடவில்லை என்பதை எடுத்துக்காட்டின. கூர்மையாகப் பளிச்சிட்ட அவன் விழிகள் கடற்கரையையும், தூரத்தில் தெரிந்த சில கலங்களையும் கவனித்துக் கொண்டிருந்தன. அவன் கரம் உயர்ந்து, சற்றே நரையோடிய தாடியையும் மீசையையும் தடவி, அவன் ஏதேதோ சிந்தனையிலிருப்பதைப் புலப்படுத்தியது.

அவன் இடையில் தொங்கிய பட்டையான யவனர்களின் வாள் அத்தனை நீளமில்லாவிட்டாலும் அகலமாகவும் கனமாகவும் தெரிந்தது. அதற்கு நேர்மாறாக, நெற்றியில் அவன் இட்டிருந்த சந்தனம் மெல்லிய கீற்றாகத் திகழ்ந்தது. வழியில் எதிர்ப்பட்ட இரண்டொருவரிடம் அவன் பேசிய பேச்சு மலைநாட்டுத் தமிழாக இருந்தது.

கடலோரப் பாதையில் நிதானமாகப் புரவியை நடத்திய அந்த வீரன், இருள் கவியத் தொடங்கிய சமயத்தில், கடல் வளைந்து நிலப் பகுதியில் ஊடுருவிய அந்தப் பகுதியை நெருங்கினான்.

சுமார் நான்கு காத தூரத்துக்கு நிலத்தை ஊடுருவிய கடல், அலைகள் மட்டுப்பட்டு, சுற்றிலும் மரங்களடர்ந்து சூழ்ந்திருந்த நிலப்பகுதியின் நடுவே, நீண்ட வட்ட வடிவமாகப் பெரும் ஏரி போல் அமைந்திருந்தது.



கடலில் சென்ற கலங்களின் பார்வையிலிருந்து அந்தப் பகுதியை முற்றிலும் மறைத்து விட்டன மரக் கூட்டங்கள்.

அதுவரை கடற்கரையை ஒட்டியே வந்த பாதை வளைந்து ஊருக்குள் சென்றதால் வீரன் தன் புரவியையும் திருப்பி, ஊரை நோக்கிச் செலுத்தினான். விழிஞம் என்று அழைக்கப்பட்ட அந்த ஊரை நெருங்க நெருங்க, சாதாரண மக்கள் குறைந்து கொண்டே போய், சேர வீரர் நடமாட்டமே அதிகமாயிருப்பதையும், ஊருக்குள் நுழையும் வழியில் நின்ற வீரர்கள், வரும் ஒவ்வொருவரையும் விசாரித்த பின்பே உள்ளே அனுமதிப்பதையும் கவனித்தான். அதைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல் புரவியை அந்த வீரர்களை நோக்கிச் செலுத்தினான்.

அவனது தோரணையும் நிதானமும் வீரர்கள் மனதில் சற்று மரியாதையையும் அந்த அகலமான வாள் அச்சத்தையும் ஏற்படுத்தவே, புரவி நின்றதும் அவனை நெருங்கி, ''ஐயா யார் நீங்கள்?'' என்றனர்.

எதிரில் நின்ற இரு வீரர்களையும் சற்றுத் தள்ளி வழியை மறித்தபடி நின்றிருந்தவர்களையும் அலட்சியமாக நோக்கிய அந்த வீரன், ''என் பெயர் சமுத்திர பந்தன். கடற்படைத் தலைவரைக் காண வந்திருக்கிறேன்'' என்று அறிவித்தான்.

''ஐயா, தகுந்த அத்தாட்சியில்லாமல் எவரையும் உள்ளே அனுமதிக்க உத்தரவில்லை'' என்றான் இருவரில் ஒருவன்.



சமுத்திர பந்தன் முகத்தில் முறுவலொன்று படர்ந்தது. தன் இடைக் கச்சையிலிருந்து முத்திரை மோதிரமொன்றை எடுத்து நீட்டினான்.

மோதிரத்தைக் கண்ட வீரர்களின் விழிகளில் அச்சம் தோன்றியது. அனாவசியமாக சமுத்திரபந்தனைக் காக்க வைத்ததற்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டு வணங்கி வழி விட்டனர்.

''நேரே சென்று வலது புறம் திரும்பியதும் படைத்தலைவர் மாளிகை இருக்கிறது'' என்று வழியையும் கூறினர்.

வழியெங்கும் உலவிய வீரர்களும், ஆங்காங்கே எழுந்து நின்ற கூடாரங்களும் அவற்றில் எரிந்த பந்தங்களும், பந்தங்களின் ஒளியில் பளிச்சிட்ட வாட்களும் வேல்களும் சமுத்திரபந்தனின் பார்வையில் லேசான வியப்பையும் பிரமிப்பையும் ஏற்படுத்தின.

வலது புறத்தில் இடைவெளி கொடுத்த கட்டடங்களினூடே பார்த்த போது, ஏரி போல விரிந்திருந்த கடல் உட்புகுந்த பகுதியில் பெரும் மரக்கலங்கள் பல நின்று கொண்டிருந்தன.

இப்படியொரு இடத்தைத் தேர்ந்தெடுத்து படைத்தளம் அமைத்திருந்த படைத் தலைவனை மனதிற்குள் பாராட்டவும் செய்தான் சமுத்திர பந்தன்.

வலதுபுறத்தில் தெரிந்த மாளிகையின் வாயிலில் காவல் பலமாக இருந்தது.

ஆனால் சேர வீரர்களிடையே அந்த முத்திரை மோதிரத்தின் சக்தி அபரிமிதமாயிருந்தது.

மாளிகைக்குள் நுழைந்த இரண்டொரு நிமிடங்களில் மாளிகை காரியஸ்தரையும் சமுத்திர பந்தன் முன் நிற்க வைத்தது அந்த முத்திரை மோதிரம்.

''ஐயா, தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?'' பவ்யமாகக் கேட்டார் காரியஸ்தர்.

''காஞ்சியிலிருந்து'' என்ற சமுத்திர பந்தனை வியப்புடன் நோக்கினார்.

''படைத் தலைவரை எதற்காகப் பார்க்க விரும்புகிறீர்கள்?''

''அதை அவரிடம்தான் கூற இயலும்'' என்றான் சமுத்திரபந்தன்.

''படைத் தலைவர் மரக்கலங்களைப் பார்வையிடச் சென்றிருக்கிறார். நீங்கள் மேன்மாடத்து அறையில் தங்கலாம். காலையில் படைத் தலைவர் உங்களைக் காண்பார்'' என்ற காரியஸ்தர், வீரனொருவனை அழைத்து, ''இவரை மேன்மாடத்து விருந்தினர் அறையில் தங்க வைத்து வா'' என்றும் உத்தரவிட்டார்.

படைகளை மட்டுமின்றி மாளிகையின் நிர்வாகத்தையும் கனகச்சிதமாக நிர்வகிக்கும் படைத் தலைவனை மனதுக்குள் சிலாகித்துக் கொண்ட சமுத்திரபந்தன், வீரனைத் தொடர்ந்து படிகளில் ஏறினான்.

தனக்கு அளிக்கப்பட்ட அறை விசாலமாகவும் சகல வசதிகளுடனும் ஓர் அப்பழுக்கும் இன்றிச் சுத்தமாகவும் இருப்பதைக் கண்ட சமுத்திரபந்தனின் மதிப்பில் படைத் தலைவன் மேலும் உயர்ந்தான். சற்று நேரத்தில் வந்த சேரநாட்டு மதுவை வேண்டாமென மறுத்து விட்டு, கனி வகைகளையும் பாலையும் அருந்திய சமுத்திரபந்தன் பஞ்சணையில் சாய்ந்தான்.

## அருள்வாக்கு

தான தர்மம் செய்வது, சந்தியாவந்தனம், யாகம், பூஜை, பரோபகாரம் எல்லாம் நல்லதில் மனசைச் செலுத்தும் பகிரங்க சாதனங்கள். தியானம் என்பதே மிகச் சிறந்த அந்தரங்க நிலை. அதற்கு அநுகூலமாக இருக்கிற மற்ற அந்தரங்க சாதனங்கள் ஐந்து. அவை, அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், சௌசம், இந்திரிய நிக்ரஹம் என்பவை. எவருக்கும், எவற்றுக்கும் கெடுதலே எண்ணாதபடி மனசை அன்புமயமாகச் செய்து கொள்வது அஹிம்சை! மனம், வாக்கு, காயம் மூன்றையும் உண்மையிலேயே ஈடுபடுத்துவது சத்தியம். அஸ்தேயம் என்றால் 'திருடாமல் இருப்பது' என்று அர்த்தம். அதாவது, பிறர் பொருட்களில் ஆசையே எழாதபடி வைராக்கியமாக்கிக் கொள்வது. சௌசம் என்றால் தூய்மைப்படுத்திக் கொள்வது. ஸ்நானம், மடி, ஆசாரம், ஆகாராதிகளின் சுத்தி எல்லாம் சௌசத்தில் அடங்கும். இந்திரிய நிக்ரஹம் என்பது புலன்களை அவற்றின்

கதிரவன் உதித்து இரண்டு நாழிகைகளுக்குப் பின்னரே விழித்துக் கொண்ட சமுத்திரபந்தன், விரைந்து நீராடி வீரனொருவன் கொண்டு வந்த காலை உணவையும் முடித்து எழுந்த தருணத்தில், ''படைத் தலைவர் தமது அறையில் தங்களைக் காத்திருக்கப் பணித்தார்'' என்று அவ்வீரன் தெரிவித்தான்.

வீரனுடன் நடந்து, நீண்ட தாழ்வரையைக் கடந்த சமுத்திரபந்தன், கோடியிலிருந்த அறைக்குள் அழைத்துச் செல்லப்பட்டான்.

சுவரில் பல்வேறு வடிவங்களில் பல்வேறு நாடுகளின் வாட்கள் மாட்டப்பட்டிருந்தன. நேரான, வளைந்த, நெளிந்த, பட்டையான அந்த வாட்களையும் இருக்கைகளில் விரிக்கப்பட்டிருந்த சீனத்து

வண்ணப் பட்டுத் துணிகளையும் ஆங்காங்கே காட்சி தந்த யவன நாட்டு அலங்காரப் பொருட்களையும் காண அது ஒரு சிற்றரசனின் அறை போலவே தோற்றமளித்தது.

படைத் தலைவன் பெரிதும் படாடோபத்தை விரும்புபவன் என்று புரிந்து கொண்ட சமுத்திரபந்தன் படாடோபத்தை விரும்பும் மனிதன் புகழ்ச்சியில் மயங்குவான் என்று அறிந்திருந்ததால், தான் பேச வேண்டிய முறையையும் தீர்மானித்துக் கொண்டான்.

அறையிலிருந்த பொருட்களைப் பார்த்தபடி நின்றிருந்த சமுத்திரபந்தனைப் பின்னாலிருந்து ஒலித்த குரல் திருப்பியது.

''என்ன அப்படி பிரமித்து நிற்கிறாய் சமுத்திரபந்தா?''

திரும்பிய சமுத்திரபந்தன், எதிரே எளிய உடையில் சுமாரான உயரத்தில் மெலிந்த ஆனால் திடமான சரீரத்துடன் படைத்தலைவன் நிற்பதைக் கண்டான்.

அவனைக் கண்டதும் மேலும் அதிக பிரமிப்பை முகத்தில் ஏற்றிக் கொண்ட சமுத்திரபந்தன் ஒருமுறை வணங்கி நிமிர்ந்தான்.

''தாங்கள் எத்தனை நாடுகளுக்குச் சென்று வந்திருக்கிறீர்கள் என்பதை இவை தெரிவிக்கின்றன படைத் தலைவரே!''

படைத்தலைவன் கங்காதரன் முகத்தில் கர்வம் விரிந்தது.

''அத்துடன் இந்த ஏழையின் பெயரைத் தலைவர் அறிந்திருப்பது எனக்குப் பெருமை அளிக்கிறது'' என்ற சமுத்திரபந்தன், ''நான் சில ஆண்டுகளுக்கு முன்னர் சேரலாதர் உத்தரவின்பேரில் வாணிபம் என்ற போர்வையில் காஞ்சிக்கு அனுப்பப் பட்டவன்'' என்றான்.

''யார் பாஸ்கரவர்மராலா?'' - படைத் தலைவன் முகத்தில் சந்தேகச் சாயை லேசாகப் படரத் தொடங்கியது.

நிதானமாகத் தலையசைத்து மறுத்த சமுத்திரபந்தன், ''இல்லை தலைவரே, அவருக்கு முன்பு தாணுரவிவர்மரால், அவர் இறப்பதற்கு ஓராண்டுக்கு முன் அனுப்பப் பட்டவன்.''

கங்காதரன் முகத்திலிருந்த சந்தேகச் சாயை நீங்கவில்லை. ''இதுவரை நான் உன் பெயரை எந்த ஓலையிலும் கண்டதில்லையே?''

''உண்மைதான் படைத் தலைவரே. நான் யார் மூலமும் செய்திகளை அனுப்புவதில்லை. அதனால்தான் சோழர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக இருக்கிறேன்'' என்ற சமுத்திரபந்தன், தன் இடைக் கச்சையிலிருந்து முத்திரை மோதிரத்தை எடுத்து அதிபவ்யமாக நீட்டினான்.

படைத் தலைவனுக்குச் சந்தேகமேதும் இருந்திருந்தால் அது, அந்த மோதிரத்தைக் கண்டதும் அடியோடு நீங்கி விட்டது.

படைத்தலைவன் முகத்தைக் கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த சமுத்திரபந்தன் தொடர்ந்தான் : ''நான் இப்போது நேரிடையாக வர வேண்டிய அவசியம் நேர்ந்திருக்கிறது, தலைவரே!''

''என்ன அது?''

''வடக்கே சோழன் படைபலம் குறைந்து வருகிறது.''

''அப்படியா? நான் வேறுவிதமாக அல்லவா கேள்விப்பட்டேன்?''

''உண்மை நிலை அப்படியல்ல தலைவரே. ஓரிரு இடங்களில் சோழன் வெற்றி பெற்றது உண்மைதான். ஆனாலும் படைச் சேதம் அதிகம். கங்கைகொண்ட சோழபுரத்திலும், காஞ்சியிலும் உள்ள காவற்படைகள் வடக்கே கிளம்பச் சித்தமாயிருக்கின்றன. மேலும்...''

''மேலும் என்ன?''

''தெற்கே தொல்லை கொடுக்க இருப்பது பாண்டியர் மட்டுந்தான். அவர்களையும் மேலைமங்கலப் போரில் அழித்து ஒடுக்கி விட்டான் சோழன். தற்போதைக்கு அவர்கள் தலைதூக்க இயலாது. எனவே வடக்கில் நடக்கும் போருக்கு உதவிப்படை அனுப்பத் தீர்மானித்திருக்கிறான் சோழன்.''

''அப்படியானால் சோழ நாட்டில் தற்போது படைபலம் மிகக் குறைவு என்கிறாயா?''

---

போக்கில் விடாமல், ஒவ்வோர் இந்திரியத்துக்கும் இவ்வளவுதான் ஆகாரம் கொடுப்பது என்று தீர்மானமாக வைத்துக் கொள்வது. 'கண் இதைப் பார்க்கக் கூடாது. காதும் இதைக் கேட்கக் கூடாது. வாய் இதை தின்னக் கூடாது, பேசக் கூடாது. உடம்பு இந்தப் பாவத்தைச் செய்யக் கூடாது' என்று தடுத்து நிறுத்துவதே இந்திரிய நிக்ரஹம். சாதனை செய்வதற்காக மட்டுமே சரீரம் வேண்டும். சரீரம் உயிர் வாழுவதற்காக இந்திரியங்களுக்கு எவ்வளவு அதம பட்சம் தீனி கொடுக்க வேண்டுமோ அவ்வளவே கொடுக்க வேண்டும்.



- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

"ஆம் தலைவரே, மீண்டும் பாண்டியர் தலைதூக்காமல் இருக்க சொற்பப் படையொன்றை மதுரைக்குத் தெற்கே நிறுத்தியிருக்கிறான் சோழன். மற்றபடி பெரும் படைபலமேதும் அங்கு இல்லை."

"சோழனின் பெரும் கடற்படை என்னவாயிற்று?"

"கடற்படை முழுதும் துங்கபத்திரா நதி முகத்துவாரத்தில் நிற்கிறது. நதிக் கரை வரையில் சாளுக்கியருடன் போராடிக் கொண்டிருக்கிறார்கள் சோழ வீரர்கள்."

சமுத்திரபந்தனின் தெளிவான பதில்கள் படைத்தலைவன் முகத்தில் ஒரு மலர்ச்சியை ஏற்படுத்தின.

"மகிழ்ச்சி, சமுத்திரபந்தா! நமக்கு மட்டுமல்ல, நம்மிடம் உதவி கேட்டு வந்திருக்கும் பாண்டியன் மாறவர்மனுக்கும் நிலைமை சாதகமாக உள்ளது!"

"படைத்தலைவரே!" - லேசாக ஆட்சேபம் தொனித்த குரலில் சமுத்திரபந்தனின் அழைப்பு, படைத் தலைவனுக்கு வியப்பையே ஏற்படுத்தியது. தொடர்ந்து வந்த கேள்வி படைத்தலைவனைச் சற்று குழப்பவும் செய்தது.

"மாறவர்மனுக்குப் பாண்டிய நாட்டைப் பெற்றுத் தரத் தீர்மானித்து விட்டீர்களா?"

"எதற்குக் கேட்கிறாய் சமுத்திரபந்தா? மன்னர் கூட படை உதவி புரிய ஒப்புக் கொண்டு விட்டாரே!"

"நீங்கள் அரியணையைப் பெற்றுத் தந்தாலும் மாறவர்மன் அதில் நிரந்தரமாக அமருவது சிரமம் படைத்தலைவரே!"

"ஏன்?"

"மாறவர்மனிடம் பாண்டிய மக்களுக்கு அத்தனை நம்பிக்கை இல்லை. ஜடாவர்ம பாண்டியரை மக்கள் எத்தனை நேசித்தார்கள் என்பது உங்களுக்குத் தெரியும். அவரது நேரடி வாரிசின்றி தாயாதியான மாறவர்மனை மக்கள் ஏற்றுக் கொள்வது கடினம்."

"ஜடாவர்மருக்கு வாரிசு ஏதும் இல்லையே?"

சமுத்திரபந்தன் முகத்தில் புன்னகையொன்று படர்ந்தது. "இறந்து போன பாண்டிய மன்னருக்கு மகளொருத்தி இருக்கிறாள், படைத் தலைவரே. அவள் இருப்பது வெளியானால் அரியணை அவளுக்கோ அல்லது அவளை மணப்பவனுக்கோதான் உரியது என்றாகி விடும். மாறவர்மன் நம்மோடு செய்து கொள்ளும் எந்த ஒப்பந்தமும் நிலைக்காது போய் விடும்."

படைத்தலைவன் திகைத்தான். மாறவர்மன் அரசு பெற சேரர் படை உதவினாலும் அது விழலுக்கிறைத்த நீராகி விடுமென்ற செய்தி அவனுக்குப் பெரும் திகைப்பை அளித்திருக்க வேண்டும். ஆனாலும் இத்தனை ஆண்டுகளாகத் தான் அறியாத ஒரு செய்தியைக் கூற வந்த சமுத்திரபந்தனைச் சற்று சந்தேகத்துடனேயே நோக்கினான்.

"உனக்கு எப்படித் தெரிந்தது சமுத்திரபந்தா? இதற்கு அத்தாட்சி ஏதேனும் உண்டா?"

சமுத்திரபந்தனின் விழிகள் பளிச்சிட்டன. "தலைவரே, சோழநாட்டுக் கவி திருநாராயண பட்டரைத் தாங்கள் அறிவீர்களா?"

கவியின் பெயரைக் கேட்டவுடன் படைத்தலைவன் உடல் ஒருமுறை சிலிர்த்தது. "அவருக்கும் இதற்கும் என்ன தொடர்பு?" என்று விசாரித்தான்.

"அத்தாட்சிகள் அவரிடமிருப்பதாகவும், சரியான சந்தர்ப்பத்தில் அவற்றை அறிவிப்பதாகவும் அவரே கூறியதை நான் கேட்க நேர்ந்தது. எனவேதான் தங்களுக்கு அறிவிக்க விரைந்து வந்தேன்" என்றான் சமுத்திரபந்தன்.

திருநாராயணபட்டர் எதிரிகளை வெல்லத் தமது பெரும் வாளையும், வாளைவிடக் கூர்மையான அறிவையும் பயன்படுத்துவாரேயன்றி மறந்தும் கூட எதற்காகவும் பொய் கூற மாட்டார் என்பதை திட்டவட்டமாக அறிந்திருந்த படைத்தலைவன், மாறவர்மனுக்கு அளிக்கப்பட்டிருந்த வாக்குறுதி பற்றி மறுசிந்தனை தேவை என்பதைப் புரிந்து கொண்டான். சமுத்திரபந்தனை மீண்டும் மாலையில் சந்திப்பதாகக் கூறி விடைகொடுத்தான்.

படைத் தலைவனிடமிருந்து விடை பெற்ற சமுத்திரபந்தன், விழிஞத்திலமைந்த படைத்தளம் முழுதும் உலவினான். கடற்கரையோரம் உலவியவன் மரக்கலங்களையும், மறுகரையில் இருந்த மரக் கூட்டங்களையும் கண்டான். சேரவீரர்களின் காவல் முறையில் அதுவரை காணாத பலவீனமொன்றும் அவன் கூரிய பார்வையில் பட்டது.

நீண்ட நேரம் கழித்துத் திரும்பிய சமுத்திரபந்தனுக்கு முதல் ஜாமம் முடியும் தருவாயில் படைத் தலைவனிடமிருந்து அழைப்பு வந்தது.

படைத் தலைவனது அறைக்கு விரைந்து அவன் நீட்டிய ஓலையைப் பெற்றுக் கொண்டு அதில் விழிகளை ஓட்டிய சமுத்திரபந்தன் சிலையாக நின்றான்.

அவன் முற்றிலும் எதிர்பாராத திட்டமொன்றை வகுத்திருந்தான் படைத்தலைவன். குரூரப் புன்னகையொன்றும் அவன் முகத்தில் படர்ந்திருந்தது.

(தொடரும்)

ரொம்ப தைரியசாலிதான் நீ! எனக்குத் தெரியுமே - போன வருஷம் 'சம்மர் லீவுக்கு' இங்கே வந்திருந்தப்போ அடிபட்ட நாய்க் குட்டியை டாக்டர்கிட்டே கூட்டிட்டுப் போய், அவர் ஊசி போடும் போது கூட பயப்படாம பிடிச்சுக்கிட்டியே!

இந்த வருஷமும் கோடைக் காலம் ஆரம்பிச்சாச்சு. அம்மாவுக்குத் தண்ணீர்ப் பானையை நிரப்பி வைக்கிற வேலையே சரியா இருக்கும்.

வெயில் காலத்துல ரொம்ப வியர்த்துக் கொட்டுறதாலேதான் அதிகமாத் தண்ணீர் குடிக்கிறோம். 'அப்பா! என்ன வெயில்! என்ன சூடு! என்ன வியர்வைன்னு அலுத்துக்கறோம்.' இதில் வேடிக்கை என்னன்னா... நம்ம உடம்பு சூட்டைக் குறைக்கறதுக்காகத்தான் வெயில் காலத்துல அதிகமா வியர்வை வெளிப்படுறது! வியர்வை மட்டும் வெளிப்பட்டு உடம்பைக் குளுமைப்படுத்தலைன்னா நாமெல்லாம் பாய்லர் மாதிரி கொதிக்கப் போவோம்!

ஆனா வியர்வையோட நம்ம உடம்புல இருக்கற உப்புச் சத்தும் நிறையவே வெளியேறிடுறது. அதனால் நிறைய தண்ணீர், உப்பு - சர்க்கரை கலந்த ஜூஸ், மோர் இது மாதிரி ஏதாவது குடிக்கறது ரொம்ப நல்லது. நான் முழுக்க வெயில்ல ஆடுற கிரிக்கெட் பிளேயர்ஸ் குளுகோஸ் கலந்த ஜூஸ் குடிக்கறதைப் பார்த்திருப்பே.

வீட்டிலே நீயும் பப்லுவும் சேர்ந்து பானகம், நீர் மோர் செய்து சாப்பிடலாம். எப்படி செய்யறதுன்னு அம்மாகிட்டே கேட்டுச் செய்யுங்க. நல்லாயிருந்ததான்னு எனக்கு எழுதுங்க.

உச்சி வெயில்ல வீட்டுக்குள்ளதான் விளையாடணும் வெளியே போகக் கூடாதுன்னு அம்மா சொல்லுவா. மத்தியானம் மூணு, நாலு மணிக்கு வெயில்ல விளையாடப் போனாலும் மறக்காம நான் வாங்கிக் குடுத்த தொப்பியைப் போட்டுக் கிட்டுப் போங்க...

அன்பு அத்தை,



நீங்கள் கேட்டவை - தராசு

# அ.தி.மு.க.-பி.ஜே.பி. கூட்டணி?



● எஸ். நாகராஜன், மேலப்பாதி

? அ.தி.மு.க. - பாரதிய ஜனதா கூட்டணி ஏற்பட வாய்ப்புண்டா?

! பாரதிய ஜனதா முதுகெலும்பைக் கழற்றி வைத்து விட்டு, சலாமிட்டு, ஜெ துதிபாடி, ஜால்ரா தட்டி, தன் தனித்தன்மையை இழந்து, தமிழகத்தில் பரிகாசத்துக்கு உள்ளாகத் தயாரானால் கூட்டணி ஏற்பட வாய்ப்புண்டு.

● ம. செந்தில் நாதன், மதுரை

? 'ஜெயலலிதா பிறந்த நாளைப் பெண் குழந்தைகள் நல நாள் விழாவாக அறிவிக்க வேண்டும்' என்று கூறுகிறாரே கவிஞர் முத்துராமலிங்கம்?

! கவிஞர் முத்துராமலிங்கம் பிறந்த நாளை விருது பெற்றோர் நலநாள் விழாவாக அறிவித்துக் கொண்டாடலாம்!

● ஆர். மணிகண்டன், தஞ்சாவூர்

? 'காகிதப் பூவில் தேன் எடுக்கும் முயற்சியில் காங்கிரஸார் இறங்கி உள்ளனர்' என்று அமைச்சர் செங்கோட்டையன் கூறியுள்ளது பற்றி?

! நல்ல கவிதை நயம் உள்ள உவமைதான். காங்கிரஸுக்குப் பொருந்துகிறதோ இல்லையோ, அ.தி.மு.க. அரசிடம் ஏதேதோ எதிர்பார்த்த மக்களுக்கு நன்றாகவே பொருந்துகிறது!

● முத்துசாமி, நாரேந்தல்

? 'ஜெயலலிதாவைப் பற்றிப் பேச கருணாநிதிக்குத் தகுதி இல்லை' என்று எஸ்.டி.எஸ். பேசியுள்ளாரே?

! ஐயய்யோ! ஜெ. பற்றிப் பேச தமக்கு மட்டும் தகுதி இருப்பதாக ஒருவேளை எஸ். டி. எஸ். நினைத்துக் கொண்டிருக்கிறாரா என்ன? ஆபத்து தான்!

● சிவ. கலாதரன், சிதம்பரம்

? 'மகாத்மா காந்தி தேசப் பிதாவா?' என்று கேட்டுள்ள அசோக் சிங்கால் குறித்து....?

! பேசியவரை விடப் பேச அனுமதித்தவர் என் நோக்கில் பெரிய குற்றவாளி.

● ச. மணிவண்ணன், வேலூர்

? இந்திய கிரிக்கெட் அணியின் தற்போதைய பலம் என்ன? பலவீனம் என்ன?

! ப : இளைஞர்கள் நிறைந்திருப்பது. ப.வீ : இளமை குறைந்திருப்பது!

● இரா மாதவராமன், கிருஷ்ணகிரி

? அரசியல்வாதிகளைத் தரம் தாழ்த்திப் படம் எடுப்பது எப்போது ஓயும்?

! அரசியல்வாதிகளின் தரம் உயரும் போது.

● இரா. கல்யாணசுந்தரம், மதுரை

? ஈக்காடுதாங்கல் - இதன் விளக்கம்?

! ஈர் - பகைமை; காடு - கொழிக்கும்; தாங்கல் - ஏரிப்பகுதி. 'ஆகா' என்று ரசிக்க விடுமுறைக்கு ஓடிவந்து விடாதீர்கள். தற்போது கொசுக்கள் கொழிக்கும் அடையாறு குட்டையும் காங்க்ரீட் காடுகளும்தான் உள்ளன.

● ஆர். தமிழரசி, சிதம்பரம் ❑

? பயங்கரவாதிகளால் பாதிக்கப்பட்ட பஞ்சாபில் கூட பஞ்சாயத்துத் தேர்தல்கள் நடந்து விட்டன. ஆனால் தமிழகத்தில் நடைபெறாதது ஏன்?

! எல்லாம் ஆட்சியிலிருப்பவரின் மெத்தனமும் சுயநலமும்தான் காரணம். இதற்குத்தான் மத்திய அரசு நகர்பாலிகா சட்டம் கொண்டு வரலாம் என்று பார்த்தால் அதற்கும் எதிர்ப்புத் தெரிவித்து எகிறுகிறார்கள்!

● சித்ரா கிருஷ்ணமூர்த்தி, கும்பகோணம்

? 'ஜெயலலிதா சக்தியின் அவதாரமா?' என்று மாநிலங்களவையில் சர்ச்சை நடந்துள்ளதே?

! அதுமட்டுமா? 'ஐந்தெழுத்து மந்திரமே ஜெயலலிதா என்கிற திருநாமம்தான்' என்று கூட விளம்பரங்கள் வந்திருக்கின்றன. ராமர் கோயில் இருக்கட்டும்; கூட்டணி அமைக்கவிருக்கும் பாரதிய ஜனதா முதலில் சிவாலயம் கட்டி ஜெ மாதாவை வழிபடலாம்.

● கு. நாகராஜன், குருசாமி பாளையம்

? பி.ஜே.பியின் டில்லி பேரணியைத் தடை செய்ய ஆன செலவு 100 கோடி ரூபாயாமே?

! பேரணி நடந்திருந்தாலும் இதற்கு மேலேயே நாட்டுக்கு நஷ்டம்தான் ஏற்பட்டிருக்கும். இன்றையத் தேவை பேரணிகளும், போராட்டங்களும் அல்ல. உழைப்பார்வமும்

* தகுதிப் பிரச்னை...



* சக்தி அவதாரம்!

ஒற்றுமையும், தேச பக்தியும் நாட்டை உயர்த்தும் மனப்பான்மையும் தாம்.

● எஸ். பாலாஜி, சென்னை

***? ஒரு ரௌடி கூட்டத் தலைவனை அட்டைப் படத்தில் போட்டு கௌரவித்திருக்கும் தினமணி குறித்து?***

! அட்டைப்படத்தில் போடுவது கௌரவிக்க மட்டுமே என்ற பத்திரிகைப் பண்பாடு மாறிவிட்டது. எது செய்தியோ அதற்குத்தான் இன்று அ.ப.

● தெ.க. திலீபன், வத்திராயிருப்பு

***? சென்னையில் மாபெரும் பேரணியை பாரதிய ஜனதா வரும் 21 – ம் தேதி நடத்துமென்று அறிவித்துள்ளதே!***

! 'ஜெ' அரசை ஒரு தர்ம சங்கடத்தில் ஆழ்த்த விரும்பாததால் பேரணி திட்டத்தை பி.ஜே.பி. கைவிட்டு விட்டதாக லேட்டஸ்ட் செய்தி. ஆக, அம்மையாரை எந்தெந்த விதங்களிலெல்லாம் திருப்திப்படுத்த முடியுமோ அந்த விதங்களிலெல்லாம் செய்து, கூட்டணிக்கு அவர் தயவைக் கோரும் நிலைக்கு பி.ஜே.பி. ஏற்கெனவே தள்ளப்பட்டு விட்டது! பரிதாபம்.

● வீ. சோழன், செம்போடை

***? 'பாரதிய ஜனதாவுடன் கூட்டு வைத்துக் கொண்டால் அ.இ.அ.தி.மு.க தமிழகத்தில் பல விரும்பத் தகாத செயல்களைச் சந்திக்க வேண்டி வரும்' என்கிறாரே கலைஞர்?***

! கொள்கை சாராத அரசியல் கூட்டு எல்லாமே இப்படித்தான் விளைவுகளைத் தந்திருக்கின்றன; தருகின்றன; தரப் போகின்றன.

● ஐ.எஸ். ஆனந்தராஜன், மாடம்பிள்ளை தர்மம்

***? 'மத்திய அரசுக்கு உயிர் கொடுக்கிறார் ஜெயலலிதா' என்று அமைச்சர் நாகூர் மீரான் சொல்கிறாரே?***

! இனி, உயிரெடுக்கிறார் என்றும் கூறலாம் அவர்.

● ஆர். உமா, திருச்சி

***? அன்பில் தர்மலிங்கம் மரணம் குறித்து?***

! தி.மு.கவின் ஆரம்பகாலத் தலைவர்களில் ஒருவர். அசாத்தியத் துணிச்சலோடு கட்சியை வளர்த்தவர். படு சுவாரஸ்ய மனிதர். ஒரு போராட்டத்தில் கைதாகி நீதிபதி முன் நிறுத்தப் படுகிறார். ஒரு கேள்விக்கு பதிலளிக்கும் முகமாக, ''நான் மாவட்டச் செயலாளர்'' என்கிறார். நீதிபதி : ''அப்படி யென்றால்?'' அன்பில் : ''உங்களுக்கெல்லாம் ஜில்லா கலெக்டர் மாதிரி எங்கள் கட்சியில் மாவட்டச் செயலாளர்!'' அன்பில் மறைவு பற்றி திருச்சி கவரொட்டி ''அதிர்ச்சி அடைகிறோம்'' என்கிறது. நிஜம். அது கலைஞர் முகத்திலும் தெரிந்தது.

● எஸ். அழகர் ராஜா, சென்னை

***? பிரதமருடன் மோதல் போக்கை வளர்த்து வரும் அர்ஜுன் சிங்கின் நெ.2 இருக்கை இரண்டொன்று நான்காம் இடத்துக்கு மாறியுள்ளது பற்றி....?***

! அவர் அது பற்றிக் கவலைப் படுவதாகத் தெரியவில்லை. ராஜ்ய சபையில் சவாணுடன் பேசப் போனவர் பிரதமரின் இருக்கையிலேயே வந்து அமர்ந்து பேசியிருக்கிறார். அப்போது அவருக்கான கேள்வி எழுப்பப்பட, அந்த நாற்காலி முன்னிருந்தபடியே பதில் கூறவும் தொடங்கியிருக்கிறார். சில வினாடிகள் பொறுத்து, எல்லோர் முகத்திலும் இருந்த திகைப்பைப் பார்த்து, தவறை உணர்ந்தவர் போல நடித்து, திருப்திப் புன்னகையுடன் தம் இடத்துக்குத் திரும்பி பதிலைத் தொடர்ந்திருக்கிறார்! பலே ஆள்தான்!


* 'விரும்பத்தகா விளைவுகள்...'


* 'உயிர் கொ(எ)டுக்கிறார்!'


* அதிர்ச்சி அடைகிறோம்


* இருக்கை நெ. 4?



❑ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். தமிழரசி,
16, பச்சையப்பன் பள்ளி தெரு,
சிதம்பரம்.



அட, அப்பபடியா!

!! ஆங்கில மொழியில் மிக அதிகமாய் உபயோகிக்கப் படும் எழுத்து E. அடுத்தபடியாக வருவது T. மிகக் குறைவாக உபயோகிக்கப்படும் நான்கு எழுத்துக்கள் Z, X, Q, J (இதே வரிசையில்)

# முந்திக் கொண்டு நிற்கும் 'E'

!! ஹீப்ரு மொழி 2300 ஆண்டுகளாக வழக்கில் இல்லாமலே இருந்தது. அதனைத் தங்கள் பொது மொழியாக ஏற்று, அதற்கு மறுவாழ்வு அளித்தனர் இஸ்ரேல் நாட்டு யூதர்கள். 'இறந்து' போன ஒரு மொழிக்கு மறுவாழ்வு கிடைத்ததாக வேறு சரித்திரம் கிடையாது.

!! ஜார்ஜ் பைரன் என்ற ஆங்கிலக் கவி எழுதிய 'Corsair' என்ற நூல் 1814-இல் பதிப்பிக்கப் பட்ட போது ஒரே நாளில் 30,000 பிரதிகள் விற்றன.

!! மார்க்ஸ் - எங்கல்ஸ் எழுதிய கம்யூனிஸ சித்தாந்தம் 1848-ஆம் ஆண்டு ஜெர்மனியில் பதிப்பிக்கப் பட்ட போது யார் கவனத்தையும் அது கவரவில்லை. அதன் ரஷ்ய மொழிபெயர்ப்பு 1860கள் வரை தடைசெய்யப் பட்ட நூலாகவே இருந்தது. 1872-இல் மறுபதிப்பு வெளியான பிறகே அந் நூல் பரபரப்பை உண்டாக்கியது.

!! மைகல் ஆஞ்சலோ ஓர் ஓவியர் மட்டும் அல்லர்; மிகச் சிறந்த கவிஞரும் கூட. அவருடைய சுமார் 250 கவிதைகளை இன்னமும் இலக்கிய, சரித்திர ஆர்வலர்கள் ஆவலுடன் படிக்கிறார்கள்.

!! 'மாண்டரின்' என்ற சீன மொழிச் சொல் சீன வட்டார வழக்கு மொழி ஒன்றையும், சீன அரசுப் பரம்பரை ஒன்றையும் குறிக்கப் பயன்படுத்தப்படுகிறது. இச் சொல் 'மந்திரி' என்ற நம் நாட்டு வடமொழிச் சொல்லின் திரிபுதான்.

!! அறுபது மில்லியன் ஆண்டுகளுக்கு முன் குதிரைகள் ஓர் அடி உயரமே இருந்தன.



!! கங்காரு என்றால் 'எனக்குப் புரியவில்லை' என அர்த்தம். அந்த விலங்கின் பெயர் என்ன என்று ஒரு பழங்குடி இனத்தவரிடம் கேட்ட போது அவர் அளித்த பதிலே அதன் பெயராக நிலைத்துவிட்டது.

!! பாலூட்டிகளுள் நிறங்களை வேறுபடுத்தி அறிய வல்லவை குரங்குகள் மட்டுமே. (மனிதர்களைத் தவிர)

தொகுப்பு : உதய்லால்

# போயஸ் தோட்டத்தில் ஆபீஸ் பையன்!



'தம் பிறந்தநாளை யாரும் கொண்டாட வேண்டாம் என்று புரட்சித் தலைவி கூறியிருந்தார். நாங்களாகத்தான் கொண்டாடினோம்' என்று நாவலர் நெடுஞ்செழியன் பேசியிருக்கிறார். இப்படித் தலைவியின் சொல்லை மதிக்காமல் அவருடைய பிறந்த நாளைக் கொண்டாடிய அமைச்சர்களின் கதி என்னாகியிருக்குமோ ஏதாகியிருக்குமோ என்ற பதைப்புடன் போயஸ் தோட்டத்துக்குள் ரகசியமாக நுழைந்து துப்பறிந்தான் ஆபீஸ் பையன்.

அவன் சமர்ப்பித்த அறிக்கையாவது :

ஓர் அமைச்சர் கைகால் உதற வருகிறார். முதலமைச்சர் செல்வி ஜெயலலிதா அவரைக் கடும் சினத்துடன் பார்த்து, ''என்ன நீங்கள், நான் அவ்வளவு கண்டிப்பாய்த் தடுத்திருந்தும் என் பிறந்த நாள் விழாவைக் கொண்டாடினீர்களாமே? உண்மைதானா?'' என்று கடு கடுக்கிறார்.

''ஆமாம் மேடம். தெரியாத்தனமாய் ஐம்பதாயிரம் போஸ்டர் அடித்து ஒட்டி, தெரியாத்தனமாய்த் தோரணங்கள் கட்டி...''

''என்ன தெரியாத்தனமாய்? குழந்தையா நீங்கள்? சரி, இப்போது எங்கே உங்கள் ஜாகை?''

''நுங்கம்பாக்கத்தில்....''

''ஓ. அதுவா? தெரியும். அது சின்ன வீடு. மெயின்ட்டினன்ஸ் பிராப்ளங்கள் இல்லாமல் ஹாய்யாக இருக்கிறீர்கள். அதனால்தான் இந்தப் பொறுப்பில்லாத்தனம். அடையாறு கிரீன்வேஸ் ரோடில் ரோஜா மாளிகைக்கு உங்களை மாற்றுகிறேன். பிரம்மாண்டமான மாளிகை. பிரம்மாண்டமான தோட்டம். அவ்வளவு பெரிய இடத்தை நிர்வாகம் பண்ண முடியாமல் நன்றாய்த் திண்டாடுங்கள்! அதுதான் உங்களுக்குத் தண்டனை!''

அடுத்த அமைச்சரும் பயந்தபடி வருகிறார். ''மேடம், நீங்கள் சந்தோஷப்படுவீர்களாக்கும் என்று.....''

''சந்தோஷமா! எனக்கா! இத்தனை வருஷம் பழகியும் எனக்கு இந்த ஆடம்பரங்கள் பிடிக்காது என்று உங்களுக்குப் புரியவில்லையே! சே!'' என்று சொன்னபடி உள்ளே போய் ஒரு பொன்னாடை எடுத்து வந்து அவருக்குப் போர்த்துகிறார் முதல்வர்.

''மேடம்! என்ன... நான்....''

''இதுதான் உமக்குச் சரியான தண்டனை. இந்த வெயில் காலத்தில் இதைப் போர்த்திக் கொண்டு நன்றாய்ப் புழுங்கும். வேர்த்துக் கொட்டட்டும். போங்கள் என் கண் முன்னே நிற்காமல்!''

மற்றுமொரு அமைச்சர் தயங்கித் தயங்கி வருகிறார். ''நான் அண்டை அசல் ஊர்களிலிருந்து ஆட்களைத் திரட்டிப் பேரணி நடத்தியது உண்மைதான் மேடம். என்னை மன்னிக்கணும்...''

''சே! என்னிடம் விசுவாசமோ மதிப்போ இல்லாத உங்களை என்ன செய்தாலும் தகும். உங்களுடைய சாதா காரைப் பறித்து, சகிக்க முடியாத ஏஸி சொகுசுக் காரைத் தரும்படி இப்போதே உத்தரவிடுகிறேன். ஜலதோஷம் பிடித்து, இருமல் வந்து திண்டாடுங்கள்!''

இப்படிப் பல அமைச்சர்கள் வந்து தண்டனை பெற்றுத் திரும்பிய பிறகு முக மலர்ச்சியுடன், ராஜகம்பீரமாக ஓர் அமைச்சர் உள்ளே வருகிறார். ''மேடம், தாங்கள் சொன்னபடியே நான் தங்கள் பிறந்த நாளைக் கொண்டாடவில்லை. எங்கள் ஊரில் கொண்டாடுவதாக இருந்த மற்றவர்களையும் தடுத்து விட்டேன்!''

''ஆ! நீங்களல்லவா உண்மையான தொண்டர். மந்திரியாக ஆவதற்கு முன்னால் நீங்கள் என்ன செய்து கொண்டிருந்தீர்கள்?''

''ஊரில் வீட்டுக்கு வீடு பேப்பர் போடும் பையனாக இருந்தேன், மேடம்.''

''அடடா! அந்தத் தொழிலில் உள்ள ஆனந்தம் வேறு எதில் வரும்? இங்கே மந்திரி கிந்திரி என்று எத்தனை கஷ்டம் உங்களுக்கு! எவ்வளவு பொறுப்பு! இனிமேல் அதெல்லாம் வேண்டாம். மந்திரி பொறுப்பிலிருந்து உங்களை நீக்கிவிட்டேன்! பழையபடி பேப்பர் போடும் வேலைக்கே போய்ச் சந்தோஷமாக இருங்கள்! உங்கள் விசுவாசத்துக்கு இதுதான் என்னாலான பிரதியுபகாரம்'' என்று நெகிழ்ச்சியுடன் சொல்லிக் கண்ணைத் துடைத்துக் கொள்கிறார் செல்வி ஜெயலலிதா.

– அவிட்டம்

# சபாஷ், கிருஷ்ணா!

"இருகாணிகளைத் தயாரிக்கிறது சுந்தரம் ஃபாஸனர்ஸ் நிறுவனம்" என்று சொன்னால் பலருக்கும் "இவ்வளவு தானா?" என்று தோன்றக்கூடும். ஆனால் மோட்டார் வாகனங்களுக்குப் பல்வேறு அளவுகளில் Bolts & Nuts தயாரிப்பது என்பது சாமானிய விஷய மல்ல. அதற்கு தரக் கட்டுப்பாடு தயாரிப்பிலும் உண்டு; உலோகக் கலவையிலும் உண்டு. அல்லாது போனால் உயிருடன் விளையாடும் கதையாகி விடும். இவற்றைத் தயாரிப்பதில் இந்தியத் தரம் மட்டுமின்றி சர்வதேசத் தரத்தையே எட்டிப் பிடித்து ISO 9000 என்ற கடினமான 'ஆடிட்' பரீட்சையில் தேறி, பெருமையடைந்துள்ளது சுந்தரம் ஃபாஸனர்ஸ் நிறுவனம். இதனாலெல்லாம் இதன் ஏற்றுமதிகள் அதிகரித்து, இந்த ஆண்டு 11 கோடி ரூபாயை எட்டிப் பிடிக்கிறது. நாலு ஆண்டுகளுக்கு முன் இது ஒரு கோடி ரூபாயாகத்தான் இருந்தது என்பது வளர்ச்சியின் பரிமாணத்தை உணர்த்தும்.

இன்று சுரேஷ் கிருஷ்ணாவைத் தலைவராகக் கொண்டு இயங்கும் இந்த நிறுவனம் 1964-ல் டி.வி.எஸ். நிறுவனங்களின் ஓர் அங்கமாக அம்பத்தூரில் சிறு தொழிலாகத்தான் தொடங்கியது. இன்று பிரமிக்கத்தக்க வளர்ச்சியடைந்து பாடியில் இயங்கும் சுந்தரம் ஃபாஸனர்ஸ், மோட்டார் வாகனங்களுக்கு மட்டுமின்றி, பல்வேறு இன்ஜினீரிங் தொழில்களுக்கும் அவரவர் தேவைக்கேற்ப விசேஷத் தரத்தில் Bolts & Nuts தயாரித்து அளிக்கிறது. 'ஃபாஸனர்ஸ்' என்பது இவற்றுக்குப் பொதுப் பெயர்.

விரிவாக்கத்திலும் இறங்கி, 'கியர்' விஸ்டம்களை மட்டுமின்றி, கம்ப்யூட்டர் துறையிலும் புகுந்து 'ஸாஃப்ட்வேர்' தயாரிப்பில் சக்கை போடு போடுகிறது. கடந்த பத்து ஆண்டுகளில் சுந்தரம் ஃபாஸனர்ஸ் நிறுவனத்தின் விற்பனை, பத்து கோடியிலிருந்து ஒரே தாவாகத் தாவி 137 கோடியை எட்டிப் பிடித்திருக்கிறது. கூடவே தொழிலகத்தை அவ்வப்போது நவீனப்படுத்தியும் வந்திருக்கிறார்கள். ஆரம்பத்திலிருந்து கடந்த 26 ஆண்டுகளில் ஒரு மனித மணி நேரம் கூட இந்த நிறுவனம் இழக்கவில்லை என்று சொன்னால் அதற்கு அர்த்தம், வேலை நிறுத்தம் - கதவடைப்பு போன்ற எதையும் இவர்கள் கண்டதில்லை என்பதுதான். இதற்காகத் 'தொழிலாளரைப் பாராட்டுவதா? நிர்வாகத்தைப் போற்றுவதா?' என்று



● ஏற்றுமதி துவக்க விழாவில் ஜி. ராமஜுலு, ஆர். வீ. யுடன் சுரேஷ் கிருஷ்ணா.

நாம் யோசிக்க வேண்டாம். அவர்களே ஒருவரை ஒருவர் வாழ்த்திக் கொள்கிறார்கள்! அதுவும் ஒரு புதுமையாகத்தான் இருக்கிறது.

இந் நிறுவனத்தின் சமீப சாதனை, அமெரிக்காவிலுள்ள ஜெனரல் மோட்டார்ஸுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டு ரேடியேட்டர் மூடிகளைச் சர்வதேசத் தரத்துக்குச் செய்தளிப்பதாகும். இந்த ஒப்பந்தப்படி ஜெனரல் மோட்டார்ஸ், பிரிட்டனில் இயங்கிக் கொண்டிருந்த தங்கள் இயந்திரங்கள் சிலவற்றை சுந்தரம் ஃபாஸனர்ஸுக்கு விற்க, அவற்றை இங்கு கொண்டு வந்து நிறுவி, இயக்க ஆரம்பித்து, குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் முதல் கட்ட ஏற்றுமதியும் நடந்து விட்டது! பல் வேறு உலக நாடுகளுடன் போட்டியிட்டுத் தான் இந்த ஒப்பந்தத்தைச் சுந்தரம் ஃபாஸனர்ஸ் நிறுவனம் செய்து கொள்ள வேண்டியிருந்தது என்பது ஒருபுறமிருக்க, விலை மிகக் குறைவாகவும் தரம் மிக அதிகமாகவும் இல்லாது போனால் ஆர்டர் கிடைத்தே இராது. மார்ச் மாதம் ஐந்தாம் தேதி முன்னாள் ஜனாதிபதி ஆர்.வியும் தொழிலாளர் தலைவர் ஜி. ராமானுஜமும் வாழ்த்துக் கூற, ஒரு பிரும்மாண்ட எஃகு 'கன்டெய்னர்' பெட்டி நிறைய ரேடியேட்டர் மூடிகள் கப்பலேறக் கிளம்பிச் சென்று விட்டன! உற்பத்தியை ஆரம்பித்து வைக்க ஆர்.வி. அழைக்கப்படவில்லை; ஏற்றுமதியைத் தொடங்கி வைக்கத்தான் அழைக்கப்பட்டிருந்தார்! இனி உலகின் மூலை முடுக்குகளில் ஓடும் கார்களில் எல்லாம் ரேடியேட்டர் மூடியில் நமது "TVS" முத்திரை பதிக்கப்பட்டிருக்கும்!

''அது சரி, ரேடியேட்டர் மூடி ஏற்றுமதியில் பிரமாதமாக என்ன கிடைத்து விடப் போகிறது?'' என்று எண்ணும் சந்தேகப் பேர்வழிகளுக்கு ஒரு செய்தி : ஓராண்டுக்கு 4 பில்லியன் டாலர் பெறுமானமுள்ள ரேடியேட்டர் மூடிகள் ஏற்றுமதியாகும்! இது உலக மார்க்கெட்டில் 12 சதம்!

''சீக்கிரமே 25 சதவீத மார்க்கெட்டைப் பிடித்து விடுவோம்'' என்கிறார் சுரேஷ் கிருஷ்ணா.

''சபாஷ் கிருஷ்ணா!'' என்கிறோம் நாம்.

– குமரன்

# திணறடிக்கும் தலைவர்கள் – போட்டி முடிவு













இந்தப் போட்டியில் சரியான விடைகள் பத்தையும் எழுதியவர்கள் யாரும் இல்லை. எனவே அதிகபட்சமாக எட்டு விடைகளைச் சரியாக எழுதிய இருவருக்குப் பரிசுத் தொகை பகிர்ந்தளிக்கப்படுகிறது.

பரிசு பெறுவோர் விவரம் தரும் முன் சரியான விடைகள் :

*தலைவர்களை வரைந்த ஓவியர்கள் :*
*1) சுரோ 2) கோபன் 3) அரஸ் 4) உமாபதி*
*வரையப்பட்ட தலைவர்கள் :*
*1) வாழப்பாடி 2) ஜெயலலிதா 3) மூப்பனார் 4) தங்கபாலு 5) எஸ்.பி. சவாண் 6) கருணாநிதி*

***பரிசு பெறுவோர் :***

*1) அ. வெங்கடேஷ்,*
*சிண்டிகேட் வங்கி மெயின் பிராஞ்ச்,*
*59, மேற்கு ரத வீதி,*
*திண்டுக்கல் - 624 001*

*2) என். ஸ்ரீராம்,*
*த/பெ. என். நாராயணன்,*
*193, காவேரி ரோடு,*
*கருங்கல்பாளையம், ஈரோடு - 638 003.*

*பரிசுத் தொகையை இருவருக்கும் சமமாகப் பிரித்தளிக்கிறோம்.*




என் தந்தையின் நண்பரது அலுவலகத்தில் ரிஸப்ஷனிஸ்ட் வேலை காலியாக இருப்பதை அறிந்து, அவ்வேலைக்கு விண்ணப்பித்தேன். நேர்முகத் தேர்வுக்கான அழைப்பும் வந்தது.

"இது மிகவும் பொறுப்பான வேலை. மேலும் உனக்கு ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரிந்திருக்க வேண்டுமே... வேறு ஏதாவது வேலை இருந்தால் சொல்லியனுப்புகிறேன்" என்று கூறி திருப்பி அனுப்பிவிட்டார்.

ஆங்கிலத்தில் சரளமாகப் பேசத் தெரியவில்லை என்ற ஒரே காரணத்திற்காக ஓர் அரிய வாய்ப்பு கை நழுவிப் போகிறதே என்று எனக்கு மிகவும் வேதனையாக இருந்தது.

ஒருநாள் வாரப் பத்திரிகை ஒன்றைப் புரட்டும் போது அதில் "யெஸ் ரூபா ஜெகன் ஸ்பீக்கிங்" என்ற தலைப்பில் திருமதி. ரூபா ஜெகன் அவர்கள் விவேகானந்தா கல்வி நிலையத்தில் தபால் மூலம் ஆங்கிலம் சரளமாகப் பேசப் பயிற்சி பெற்ற செய்தி வெளியாகியிருந்தது.

இப்பயிற்சியில் சேர்ந்தால் ஆங்கிலத்தில் சரளமாகப் பேச முடியும் என்ற நம்பிக்கை எனக்குள் துளிர் விட்டது.

என் தந்தையின் அனுமதி பெற்று நானும் இப்பயிற்சியில் சேர்ந்தேன்.

ஓர் ஆசிரியர் எதிரில் இருந்து பாடங்களைச் சொல்லிக் கொடுப்பதைப் போல, பயிற்சி மிகவும் எளிய முறையில் அமைந்திருந்ததால் மிகுந்த ஆர்வத்துடன் இப்பயிற்சியினை மேற்கொண்டேன்.

இப்பயிற்சியை முடித்த என்னால் இப்பொழுது ஆங்கிலத்தில் பயமின்றி சரளமாகப் பேச முடிகிறது.

ஆங்கிலத்தில் பேசத் தெரியாத காரணத்தினால் எந்த வேலை எனக்குத் தர மறுக்கப்பட்டதோ, அதே ரிஸப்ஷனிஸ்ட் வேலை எனக்கு வேறு ஒரு பிரபல நிறுவனத்தில் கிடைத்துள்ளது.

"THE INSTITUTE'S COACHING IS SIMPLY SUPERB."

நீங்களும் தபால் மூலம் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம். நேர்முகப் பயிற்சியும் உண்டு. நீங்கள் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

விவேகானந்தா கல்வி நிலையம்
9, நடேசன் தெரு, தி. நகர்,
சென்னை-600 017.

NAGA

வெளிநாட்டு மாணவர்களுக்கென விசேஷ வெளிநாட்டு சேவைப் பிரிவும் இயங்கி வருகிறது.

# வீசாத தென்றலும் வராத சேதியும்

'சோகமான பாத்திரமா...? கூப்பிடு சௌகாரை...' என்று சொல்லும் அளவுக்கு உருக்கமான பாத்திரங்களில் நடித்துப் பெயர் வாங்கி விட்டேன். இதுவே எனக்கு எதிராகச் செயல்பட்டதையும் உணர்ந்தேன்.

ஆரம்ப நாட்கள் முதலே, கதாநாயகியாக நடிப்பதற்கான தகுதிகள் என்னிடம் இல்லையோ? என்ற சந்தேகம் - என் தாழ்வு மனப்பான்மை என்று கூடச் சொல்லலாம் - என்னிடம் இருந்தது. அதற்கான அழகும் பர்சனாலிடியும் என்னிடம் இல்லை என்று நினைத்தேன். மற்றொரு புறத்தில் இலேசான சமாதானமும் மனத்தில் எழுந்தது : 'டூயட் பாடி, பொம்மை போல் வந்து போவது சுலபம். ஆனால் சோகமான பாத்திரத்தில் உணர்ச்சி பூர்வமாக நடிப்பதுதான் சிரமம். அதை நம்மால் செய்ய முடிகிறதே...' என்று மனத்துக்குள் நினைத்துக் கொள்வேன்.



* அபலை அஞ்சுகம்



* குமுதம்

எவ்வளவுதான் என்னை நானே சமாதானப்படுத்திக் கொண்டாலும் எனக்குக் கதாநாயகி ரோல்கள் கிடைப்பது ரொம்பவும் குறைந்து போனதென்னவோ உண்மை. இரண்டாவது கதாநாயகியாகவே காலம் தள்ளும்படி ஆகி விட்டது.

ஒரு காலகட்டத்தில், சோக பாத்திரங்களில் நடித்து நடித்து அலுத்துப் போய், நான் மாறுபட்ட கதாபாத்திரங்கள் கிடைக்காதா என முயற்சி செய்ய ஆரம்பித்தேன். அந்த விவரங்களைப் பிற்பாடு சொல்கிறேன்.

**பா**டத் தெரிந்த கதாநாயகர்களுள் என்னை மிகவும் கவர்ந்தவர் டி. ஆர். மகாலிங்கம். 'கலீர் கலீர் என்று ஆட வந்த தெய்வம்' என்ற ஒரு பாடல் அவர் பாடியிருக்கிறார் - படத்தின் பெயர் கூட 'ஆட வந்த தெய்வம்' என்பதாகத்தான்

**சௌகார் ஜானகி**

நினைவு. எனக்கு மிகவும் பிடித்த பாடல் அது. அந்த இசைத் தட்டை வாங்க எத்தனையோ முறை முயன்று விட்டேன். இன்னமும் கிடைத்த பாடில்லை! எனது அபிமான பாடகரான டி.ஆர். மகாலிங்கத்துடன் 'அபலை அஞ்சுகம்' என்ற படத்தில் நடிக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது. அதிலே அப்பாவிப் பெண்ணாக வேடம்.

அந்தப் படத்தில் எனக்கு அறிமுகமான ஒரு நடிகை இன்றைக்கும் சக்கை போடு போட்டுக் கொண்டிருக்கிறார். அந்த நடிகை : மனோரமா!

அவருடன் ஒரு அவுட்டோர் காட்சியில் சேர்ந்து நடித்தேன். ஒரு 'பிராம்' வண்டியில் சின்னக் குழந்தை ஒன்றை வைத்துத் தள்ளிக் கொண்டு வருவேன்... அந்தக் குழந்தையும் வளர்ந்து சில வருடங்களில் குழந்தை நட்சத்திரமாகப் பிரகாசித்தது : குட்டி பத்மினி!

வஹிதா ரஹ்மானைப் பற்றிச் சொன்னது போலவே மனோரமாவின் திறமையையும் பார்த்த மாத்திரத்திலேயே எடை போட்டு விட்டேன். நான் எதிர்பார்த்தது போலவே அவரது திரை வாழ்வும் அமைந்து விட்டது.

**நா**ன் தேடிச் செல்லாமலேயே எனக்குக் கிடைத்த வித்தியாசமான பட வாய்ப்பு 'அபலை அஞ்சுகம்'. அதே போன்ற வித்தியாசமான மற்றொரு படம் 'சவுக்கடி சந்திரகாந்தா' - பெயர்களே வித்தியாசமாயிருந்தாலும், இந்த இரண்டு படங்களும் சரியாக ஓடாததால் அவற்றின் மூலம் வித்தியாசமான பாத்திரங்களில் நடிக்கக்கூடிய என் திறமையை நிலை நாட்டிக் கொள்ள முடியவில்லை.

எனினும், நான் மிகவும் மதித்துப் போற்றிய பானுமதி அம்மாவுடன் 'கானல் நீர்' படத்தில் நடித்ததும் 'குமுதம்' படத்தில் கண் தெரியாத கதாநாயகியாக நடித்ததும் மறக்க முடியாத அனுபவங்கள்.

குருட்டுப் பெண்ணாகக் கண்ணைத் திறந்து கொண்டே நடிப்பதாக நான் முதலில் சொன்ன போது சம்பந்தப்பட்ட பலரும் அதைத் தத்ரூபமாகச் சித்திரிப்பது மிகவும் கஷ்டமாக இருக்கும் என்றனர். 'ஒருவித 'mental blindness' ஐப் பழகிக் கொள்வேன்' என்று உறுதி அளித்தேன்.

அவர்களது திருப்திக்காக அப்படி நடித்துப் படம்பிடித்து ரஷஸ் போட்டுப் பார்த்த போது அசந்து விட்டனர்.













அந்தப் படத்தில் கதாநாயகனை (எஸ். எஸ். ராஜேந்திரன்) கட்டாயப்படுத்தி ஒரு குருட்டுப் பெண்ணுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுவார்கள். கல்யாணம் ஆனதும் பூனைக் குட்டியுடன் விளையாடிய படி அவள் பாடும் பாட்டுத்தான் ரொம்ப 'ஹிட்'டான 'மியாவ் மியாவ் பூனைக் குட்டி....' அந்தப் பாடல் காட்சி மிக மிக இயல்பாய் அமைந்தது எனக்கு மிகவும் சந்தோஷம் அளித்தது. படமும் சக்ஸஸ்!

குமுதம் படத்தின் தெலுங்கு வடிவமும் வெற்றியே பெற்றது. அதிலும் நான் தான் நடித்தேன்.

ஆனால் ரோஜுலு மாராயி படத்தைத் தமிழில் எடுத்த போது எனக்கு வாய்ப்புத் தரப்படவில்லை. தயாரிப்பாளரிடம் கேட்ட போது, ''நீங்க தெலுங்குல பாப்புலர்தான்; ஆனால் தமிழில் உங்களுக்கு மார்க்கெட் இல்லையே...'' என்று சொல்லி விட்டார். ஆனால் அந்தத் தமிழ் வடிவத்தில் நடித்த அஞ்சலி தேவி தமிழில் பிரபலமாகி விட்டிருந்த தெலுங்கு நடிகை தானே!

அடுத்தடுத்து இப்படிப் பல அனுபவங்கள் ஏற்பட்டதால் ஏமாற்றங்களை ஏற்கும் மனப்பக்குவமும் சீக்கிரமே என்னிடம் உருவாகி விட்டது. திரையுலகில் இதெல்லாம் தவிர்க்க முடியாதவை.....

பாலும் பழமும் படத்தில் 'தென்றல் வரும், சேதி வரும்' பாடலைக் கேட்டிருப்பீர்கள். அந்தப் பாட்டுக்காக நான் ரொம்ப சிரத்தையாக நடனம் ஆடியிருந்தேன் - எனக்கு நாட்டியம் பிடிக்காத போதிலும். முதன் முதலாகப் படத்தைப் பார்க்கப் போன போது மனத்தில் ஏராளமான எதிர்பார்ப்பு. பாடல் காட்சி தனியாக எடுக்கப்பட்டதால் அது எந்த இடத்தில் வரும் என்பது தெரியாமல் ஆவலைக் கட்டுப்படுத்திக் கொண்டு உட்கார்ந்திருந்தேன் - ஆனால் இறுதி வரை அந்தப் பாட்டு வரவேயில்லை! படத்தின் நீளம் அதிகமானதால் அதை நீக்கி விட்டதாக டைரக்டர் பீம்சிங் சொன்னார். ரேடியோவில் அந்தப் பாட்டைக் கேட்கும்போதெல்லாம் எனக்கு இச் சம்பவம் நினைவு வரும்.

(தொடரும்)

படங்கள் உதவி :
ஃபிலிம் நியூஸ் ஆனந்தன்

பம்பாய்ப் பக்கோடா!



# வருணனின் கருணை!

குடிநீர்ப் பஞ்சமோ மின்சாரத் தட்டுப் பாடோ இல்லாத அபூர்வ நகரம் பம்பாய். 'ஸ்டெபிலைசர்' அவசியமில்லாத நிலையான சீரமுந்த மின்வசதி பெற்றது... வருடத்தில் ஜூன், ஜூலை, ஆகஸ்ட், செப்டம்பர் ஆகிய நான்கு மாதங்களில் வருணனின் கருணை அள்ளிச் சொரியப்படுகிறது. 2000 முதல் 2500 மில்லி மீட்டர் வரைக்கும் பெருத்த மழையை நகரம் பெறுகிறது.

## பெரிய கோயில்

தமிழர்கள் அதிகமாக வசிக்கும் தாராவியில் 1913 ஆம் ஆண்டு கட்டப்பட்டது, தாராவி கணேசர் கோவில். கடந்த 78 ஆண்டுகளாக கணேஷ் சதுர்த்தி விழாவை நடத்தி வருகிறது. தோல் பதனிடும் தொழிற்சாலைகள் நிறைந்த தாராவிக்கு வந்த தமிழர்கள் ஒன்றுகூடிக் கோவிலை அமைத்தனர். 1942 ஆம் ஆண்டு பம்பாய்த் தென்னிந்திய ஆதி திராவிடர் சங்கத்தினர், கோவில் இடத்தையும் அதைச் சுற்றியுள்ள வீடுகளையும் சங்கத்தின் பெயரில் விலைக்கு வாங்கினர். தமிழர்கள் அதிகமாக உள்ள பம்பாயின் மற்ற இடங்களில் காலப்போக்கில் பல கோவில்கள் ஏற்பட்டாலும் தாராவி கிராஸ் ரோடு கோவிலை 'பெரிய கோவில்' என்று அழைக்கும் வழக்கம் உள்ளது.

## வட்டமேஜைச் சங்கம்!

மற்ற நகரங்களில் இல்லாத ஒரு அமைப்பாக ஆசிரியருக்குக் கடிதம் எழுதுபவர்கள் சங்கம் பம்பாயில் இயங்கி வருகிறது. அதன் முதல் செயலாளர் கிருஷ்ணகுமார் என்ற தமிழர். 'ஆல் இந்தியா லெட்டர் ரைட்டர்ஸ் அசோசியேஷன்' 1982 ஆம் ஆண்டு செப்டெம்பர் 30 ஆம் தேதி உருவானது. ஆங்கிலத்தில் சிறந்த கடிதம் எழுதுபவர்களை வருடா வருடம் கௌரவித்து அவர்களுக்குப் பரிசும் அளிக்கிறது. 'நமக்கென்ன வந்தது?' என்ற மனப்பான்மை பெருகிவரும் சமூகத்தில் ஆசிரியருக்குக் கடிதம் எழுதுபவர்களின் பணி மகத்தானதாகக் கருதப்படுகிறது.

## பரதம் பயின்ற பாதிரியார்

மேடையேறி பரதநாட்டியம் ஆடிப் பெருமை பெற்ற முதல் பாதிரியார் டாக்டர் பர்போஸா. இந்தியச் சூழ்நிலைக்கும் மரபிற்கும் ஏற்றவாறு கிறிஸ்துவ மதத்தைப் பின்பற்ற எண்ணிய பாதிரியார், கடும் எதிர்ப்புகளுக்கிடையே பரதம் கற்றுக் கொண்டார். ...'ப்ரிதி நிருத் யேஷ்வர்' என்ற நாட்டிய நாடகம் ஏசு கிறிஸ்துவை அன்பு நடனத்தின் கடவுளாகச் சித்திரிக்கிறது.

## சோர் பஜார்!

முன்னொரு காலத்தில் பிரிட்டிஷ் கவர்னர் மாளிகையில் திருடப்பட்ட சாமான்கள் இந்தச் சந்தையில் கண்டுபிடிக்கப்பட்டதால் 'சோர் பஜார்' என்று பெயர் பெற்றதாகக் கூறுகிறார்கள்..... ராஜா காலத்திய பொருட்கள் முதல் இன்றைய எலக்ட்ரானிக் கருவிகள் வரை இங்கு எல்லாம் கிடைக்கும். பேரம் பேசத் தயங்குபவர்கள் இந்த மார்க்கெட்டுக்கு வராமல் இருப்பது நல்லது. வாடிக்கையாளர்களின் திறமைக்குச் சவாலாக விளங்குகிறது இந்தச் சந்தை.

இது எங்கள் பம்பாய் – ஆசிரியர் செம்பூரான். ரூ. 45–00 சிவப்பிரியா பப்ளிகேஷன்ஸ், பம்பாய் 400 703.

தொகுப்பு : பாலன் பூங்குழலி

# வானதி வழங்கும் புதிய நாவல்கள், கதைகள்



| | விலை ரூ.பை |
|---|---|
| **ராகி. ரங்கராஜன்** | |
| வயது பதினேழு (நாவல்) | 40.00 |
| மூவிரண்டு ஏழு (நாவல்) | 25.00 |
| **ஏ. நடராஜன்** | |
| நினைவெல்லாம் நிர்மலா (நாவல்) | 22.00 |
| **இந்திரா சௌந்தர்ராஜன்** | |
| ஐந்து வழி மூன்று வாசல் | 40.00 |
| காதல் யுத்தம் | 20.00 |
| ஒன்றின் நிறம் இரண்டு | 28.00 |
| **துறைவன்** | |
| கல்லின் கருணை (சிறுகதைகள்) | 22.00 |
| **எம். எஸ். பெருமாள்** | |
| மங்கலச் சுமை (குறுநாவல்கள்) | 22.00 |
| **நீல. பத்மநாபன்** | |
| தலைமுறைகள் (நாவல்) | 57.00 |
| பாவம் செய்யாதவர்கள் (சிறுகதைகள்) | 17.00 |
| **விக்கிரமன்** | |
| சித்திரவல்லி (சரித்திர நாவல்) | 32.00 |
| **சு. சமுத்திரம்** | |
| அவளுக்காக (குறுநாவல்) | 14.00 |
| இன்னொரு உரிமை (சிறுகதைகள்) | 27.00 |
| மனம் கொத்தி மனிதர்கள் (சிறுகதைகள்) | 30.00 |

| | விலை ரூ. பை |
|---|---|
| **மீ.ப. சோமு** | |
| விதிக்கதவு (குறுநாவல்) | 22.00 |
| நந்தவனம் (நாவல்) | 65.00 |
| சீதா மணி | 17.00 |
| **உமா சந்திரன்** | |
| அன்புள்ள அஜிதா (குறுநாவல்) | 24.00 |
| அன்புச் சுழல் (சமூக நாவல்) | 65.00 |
| **டைரக்டர் மகேந்திரன்** | |
| மெட்டி (நாவல்) | 25.00 |
| மருதாணி (நாவல்) | 18.00 |
| **கௌதம நீலாம்பரன்** | |
| ராஜபீடம் (சிறுகதைகள்) | 28.00 |
| **சுந்தர பாகவதர்** | |
| அப்புறம் என்ன ஆச்சு? (நாவல்) | 16.00 |
| **அனுராதா ரமணன்** | |
| உருக மறுக்கும் மெழுகு வர்த்தி (நாவல்) | 32.00 |
| தூங்கும் நினைவுகள் | 15.00 |
| **பி.வி.ஆர்.** | |
| உன்னைச் சுற்றி ஒரு சொர்க்கம் (நாவல்) | 40.00 |
| அதிர்ஷ்ட தேவதை | 27.00 |
| **சரஸ்வதி ராம்நாத்** | |
| மகா நந்தா (தமிழில்) (மராட்டிய நாவல்) | 20.00 |
| நந்தினி (சிந்தி மொழி நாவல்) (சாகித்ய அகடாமி பரிசு பெற்ற நூல்) | 20.00 |

- ❑ தேவையான புத்தகங்களை VPP யில் பெற கடிதம் எழுதுங்கள். VPP தபால் செலவு தனி.
- ❑ புத்தக வியாபாரிகள் – கல்லூரி பள்ளி நூலகங்களுக்கு தக்க கழிவு தரப்படும்.

## வானதி பதிப்பகம்

13, தீனதயாளு தெரு,
தி.நகர், சென்னை – 600 017.
போன் : 442810

# ஐம்பது ஆண்டுகளுக்கு முன்...

## கல்கி 1943, மார்ச் 10, 20 இதழ்கள்

### ''மாபெருங்கிழவர்''

தேசத் தொண்டில் தலைநரைத்துப் போன தேசபக்தர்களுக்குள்ளே இன்று சேலம் ஸி. விஜயராகவாச்சாரியார் அக்கிரஸ்தானம் வகிக்கிறார். ''மாபெருங்கிழவர்'' என்னும் சிறப்புப் பெயருக்கு அவருடன் போட்டியிடக் கூடியவர் வடநாட்டில் பண்டித மாளவியாஜி ஒருவர்தான். ஆனால் மாளவியாஜிக்கு வயது 81தான் ஆகிறது. நமது தமிழ்நாட்டு மாபெருங் கிழவருக்கோ வயது 92. ஆயினும் அவர் பூரண அறிவுத் தெளிவுடன் இருக்கிறார் என்பதை மகாத்மாவின் உபவாசத்தைப் பற்றிக் கேட்டு அவர் கவலையுடன் அனுப்பிய செய்தியிலிருந்து தெரிந்து கொண்டோம். காங்கிரஸ் அக்கிராசன பதவி வகிக்கும் பேறு பெற்ற தென்னாட்டுத் தேசபக்தர் வெகு சிலரில் ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரும் ஒருவர். 1920ல் மகாத்மாவின் வேலைத் திட்டத்தை ஒப்புக் கொண்ட மிக முக்கியமான நாகபுரி காங்கிரஸ் ஸ்ரீ விஜயராகவாச்சாரியாரின் தலைமையில்தான் நடந்தது. மனிதர்க்குரிய நூறு வயதும் அதற்கு மேலும் ஆச்சாரியார் வாழ்ந்திருந்து தமிழ்நாட்டுக்குப் பெருமையளிப்பாராக.



\- அட்டைப்பட விளக்கம்

### சுரண்டல் கணக்கு

இந்த வருஷத்து வரவு செலவுத் திட்டமானது எல்லாரையுமே தூக்கி வாரிப் போடுவதாயிருக்கிறது! முக்கியமாக, ''இந்தியா வருகிற வருஷத்தில் 200 கோடி ரூபாய் யுத்தச் செலவு செய்யப் போகிறது'' என்பதை அறியும் போது நம்மை மேக மண்டலம் வரையில் தூக்கிவாரிப் போடத்தான் செய்யும். அப்படித் தூக்கி வாரிப் போடாமலிருக்க ஒரே ஒரு வழி இருக்கிறது. ''இந்த இருநூறு கோடி ரூபாயும் இந்தியாவை எதிரிகளிடமிருந்து காப்பாற்றுவதற்காகவே - செலவாகிறது. இதில் ஒரு செப்பாலடித்த - நடுவில் தொளையுள்ள - புதிய காலணாக்காக கூட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தைக் காப்பாற்றுவதற்காகச் செலவழிக்கப்படவில்லை'' என்னும் மந்திரத்தை இருநூறு கோடி தடவை நாம் ஜபிக்க வேண்டும். அப்போது, நம்மைத் தூக்கி வாரிப்போடாமலிருக்கும்.

\- என்ன சேதி

### மகாத்மாவின் உறுதி

இந்த துர்ப்பாக்கிய தேசத்தின் மீது பகவான் இன்னும் சிறிது கருணை வைத்திருக்கிறார் என்று தெரிகிறது. கடவுளின் கருணையினாலும், நமது முன்னோர்களின் தவப் பயனாலும் மகாத்மா காந்தி உயிர் பிழைத்தார். தள்ளாத வயதில், பலவீனமாய்ப் போன உடல்நிலையில், இருபத்தோரு நாள் முழுமையும் உபவாசமிருந்து காந்தி மகான் பிழைத்து எழுந்தார். ''உயிர்ப் பிச்சை கொடுங்கள்'' என்று பிரிட்டிஷ் சர்க்காரை நோக்கி நாம் மன்றாடினோம். பிரிட்டிஷ் சர்க்கார் அதற்குச் செவிசாய்க்கவில்லை. ஆனால், பகவானுடைய காதில் நமது பிரார்த்தனை விழுந்தது. ''உயிர் பிழைத்தே தீர்வேன்'' என்ற மகாத்மாவின் மனஉறுதியும் நமது பிரார்த்தனை நிறைவேறுவதற்கு ஒத்தாசை செய்தது. அந்த மன உறுதிதான் இந்திய மக்களை மகத்தான பழிச் சொல்லிலிருந்து காப்பாற்றியது.



\- தலையங்கத்தின் முதல் பகுதி

### நிகழ்ச்சிச் சித்திரம்



மகாத்மாவை விடுதலை செய்ய வேண்டுமென்று மேலும் தலைவர்கள் வற்புறுத்தினால் வைஸ்ராய் உண்ணா விரதம் ஆரம்பிக்கும் அவசியம் நேரலாம் என்று கருதப்படுகிறது.

\- உம்மன்

## குறுமுனியின் குறும்பு



மிகவும் உருக்கமாய்ப் பாடக்கூடிய ஒரு சங்கீத நிபுணரைக் குறித்து ''அவர் கல்லும் உருகப் பாடுவார்!'' என்று ரஸிகர்கள் உபசாரமாய்ச் சொல்லுகிறார் களல்லவா? அகஸ்தியரோ, ''உண்மையாகவே கல் உருகப் பாடவேணும். நமக்குள் அப்படிப் பாடுகிறவருக்கே இந்தப் போரில் வெற்றி; இந்தப் பொதிய மலைக் கல்லை உருகச் செய்யாதவருக்குத் தோல்வி!'' என்று உறுதியாகச் சொன்னாராம். ''ஓஹோ, குறுமுனியின் (குறுமுனி : அகஸ்தியர்) குறும்பு இது!'' என்று எண்ணிக் கொண்டே ராவணனும் குறும்பாக, ''முனிவரே! முதலில் தாங்களே பாட வேணும்'' என்று வேண்டிக் கொண்டான். 'சரி'யென்று முனிவர் பாடவே, மலைக் கல் உருகிற்று! பிறகு ராவணன் பாடின போது, உருகியிருந்தது இறுகிக் கல் முன்போலவே கல்லாகி விட்டதாம். ''இப்படியும் ஒரு சங்கீதமா?'' என்று பிரமித்துப் போன ராவணன், தன் தோல்வியை ஒப்புக் கொண்டு தமிழ் நாட்டை விட்டு லங்கைக்குப் போய் விட்டானாம்.

ராமாயணத்தில் இல்லாத - வால்மீகி முனிவர் சொல்லாத - நிகழ்ச்சிதான்! எனினும் தமிழ்நாட்டிலே தமிழ் முனிவர் நடத்திய இந்த வினோதப் போருக்குத் தமிழர்கள் சாட்சி சொல்லுகிறார்கள். இளம்பூரணர், நச்சினார்க்கினியர் என்ற இரண்டு பெரிய உரையாசிரியர்களும் சொல்லுகிறார்கள் ; பொய்யாமொழிப் புலவர் முதலான புலவர்களும் சாட்சி சொல்லுகிறார்கள்.

– தமிழ் வளர்த்த கதை : பி.ஸ்ரீ.

## அதே ரயில்தான்!



உபாத்தியாயர்: கோபு, ரயில் பிரயாணத்தைப் பற்றி ஒரு கட்டுரை எழுதியிருக்கிறாயே அது கிட்டு எழுதியதைப் போலவே இருக்கிறதே! கொஞ்சங்கூட வித்தியாசமில்லாமல் எப்படி எழுதினாய்?

கோபு : கிட்டு பிரயாணம் செய்த அதே ரயிலில்தான் நானும் பிரயாணம் செய்தேன். அதனால்தான் கட்டுரை ஒரே மாதிரியிருக்கிறது.

## மணிக்கதை









## வட்டமேஜை




# "வாங்கிட்டு வாங்கன்னா வாங்கிட்டு வாங்களேன்!"

◆ 'நாயக்குக்குக் கல்தா! பவாருக்குக் குண்டு' - நயமான தலையங்கம். காங்கிரஸுக்கு உரிய நேரத்தில் எடுத்துரைக்கும் அருமையான கருத்துக்கள் நிறைந்தது. காங்கிரஸ் ஏற்று நடந்தால் அதன் மதிப்பு உயர்வது திண்ணம்.

தக்கோலம், அ. முஸ்தபா.

◆ தலையங்கம் படித்தேன். காலை வாருவது அரசியலில் புதிதா என்ன? மகாராஷ்டிரா காங்கிரஸ் உட்பூசல் இதை மேலும் உறுதிப்படுத்துகிறது; அவ்வளவுதான்!

மொரட்டுப்பாளையம்,
இராஜேஸ்வரன்.

◆ மஹாராஷ்டிர மாநிலத்தில் முதல்வரை மாற்றினாலும் பிரச்னைகள் மாறாது என சுட்டிக்காட்டிய கார்ட்டூன் அருமை.

கொணவட்டம்,
கே. ஆர். தேவேந்திரன்.

◆ டங்கல் அறிக்கை என்றால் என்னவென்று தெரியாம லிருந்த எனக்குத் தெளிவு ஏற்படச் செய்தது தங்களின் விளக்கக் கட்டுரை.

மதுரை - 20, சி. மகேஷ்.

◆ ஆபீஸ் பையனின் 'பிச்சம் பிரதமர்ஜி பிச்சம்' - உரையாடல் சிரிக்கவும், அதே சமயம் சிந்திக்கவும் வைத்தது.

திருப்பரங்குன்றம்,
டி. கே. சுப்பிரமணியன்.

◆ 'மருத்துவருக்கு உதவும் மந்திரக் கரங்கள்' - கட்டுரை அருமை. பாலிச வாயுவினால் பாதிக்கப்பட்ட என்பது வயது மூதாட்டி, இன்று நடப்பதற்குக் காரணம் நர்சுகள்தான் என்று கூறும் போது, நர்சுகளின் சேவை எவ்வளவு மகத்தானது என்பதை உணர்ந்தோம்.

கோவை - 9, இ. கவுசல்யா.

◆ நோய் தீர்க்கும் தெய்வீகப் பணியில் ஈடுபட்டுள்ள செவிலியர் பற்றிய கட்டுரை அவர்களின் சேவை மனப்பான்மையை வெளிப்படுத்துகிறது. இத் தொழிலில் ஈடுபட்டுள்ள சிலர் தன்னலத்துடன் பணிபுரிவதும், குறிப்பாக அரசு மருத்துவமனைகளில் அலட்சியப் போக்குடன் செயல்படுவதும் வருத்தத்தக்க உண்மை.

கோவை - 38, சி. சுந்தரேசன்.

◆ இவ்வாரக் கல்கியில் ''மருத்துவருக்கு உதவும் மந்திரக் கரங்கள்'' கட்டுரை நன்றாக இருந்தது. அதில் என்னுடைய புகைப்படமும் வந்துள்ளது. மிக்க மகிழ்ச்சி. ஆனால் பி.வி. இராமச்சந்திரன் என்பதற்குப் பதிலாக, என் பெயர் ராமகிருஷ்ணன் என்று தவறுதலாக அச்சடிக்கப்பட்டுள்ளது. பிழைத் திருத்தம் வெளியிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை - 23,
பி. வி. இராமச்சந்திரன்.

(திருவாளர் ''நாயகன்'' தமது தவறுக்கு வருந்துகிறார் - ஆர்.)

◆ ஊமைக் காயம்பட்ட பெண்ணின் மௌன அலறலாக இருந்தது... நுகத்தடி மாடுகள் சிறுகதை!

முத்துப்பேட்டை, செரீபன்.

◆ மனைவி : உங்களை துவைக்கப் போடுங்க, சமைக்கப் போடுங்கன்னா சொல்றேன். போய் இந்த வார கல்கி வாங்கிட்டு வாங்கன்னுதானே சொல்றேன்.

கணவன் : கல்கியில அப்படி என்ன விசேஷம்?

மனைவி : நானும் எவ்வளவோ பத்திரிகையைப் படிச்சிருக்கேங்க. ஆனா... கல்கியில கிடைக்கிற மனத்திருப்தி வேறு எதிலேயும் இல்லை. அதுல பொய்த் தகவல் இல்லை, நடிகையோட கவர்ச்சிப் படம் இல்லை, அதனால குடும்பத்தோட சேர்ந்து படிக்க முடியுது. அதைப் படிச்சா அறிவு விருத்தியாகுது. உலக விஷயங்களைத் தெரிஞ்சுக்க முடியுது; வாரா வாரம் தலையங்கம் ரொம்ப நல்லா இருக்குது... இதெல்லாம் பொதுவான சமாசாரம். போய் இந்த வாரக் கல்கி வாங்கிட்டு வாங்கன்னா வாங்கிட்டு வாங்களேன்.

மன்னார்குடி, எம். ரேவதி.

◆ 'வசந்தத்துக்கு வரவேற்பு' கட்டுரையும், படங்களும் வசந்த கால ஹோலியைப் போன்றே குளுமையாக இருந்தன.

கருங்காலி, கபி. இன்றமகன்.

◆ ''ஏன் செய்ய வேண்டும் என நினைத்தால் கடமை. செய்தால் என்ன என்று அதையே எண்ணிப் பார்த்தால் சுகம்; அவர்களை வேறுபடுத்திப் பார்த்தால் கடமை...'' என்று 'ஓய்வுக் காலத்தில்' கதையில் துரைசாமி சொன்னது ஓய்வுக் காலத்தில் குடும்பச் சுமையைச் சுமக்க விரும்பாமல் குடும்பத்தை விட்டு ஒதுங்கி இருக்க எண்ணுகிறவர்களுக்குச் சரியான பாடம்.

இரணியல், இரணியல் 'கலை'.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka